# தணமாக்கும் தழும்புகள்



சகோ. தினகரன்

"இயேசு அழைக்கிறார்" வெளியீடு !

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய 7 ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக (E-Books) இலவசமாக (மத்தேயு 10:8) உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் (Download) செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: www.WordOfGod.in

95 சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் (E-Book) வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய WhatsApp எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ (Email) எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணைய-தளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599
Email: wordofgod@wordofgod.in

## *Wishing you in the mighty name of Jesus Christ*

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely free of cost (Matt 10:8) forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599
Email: wordofgod@wordofgod.in

# தணமாக்கும் தழும்புகள்



சகோ. தினகரன்

“இயேசு அழைக்கிறார்” வெளியீடு !



## "இயேசு அழைக்கிறார்" என்பது

ஆண்டவராகிய இயேசுவின் இணையற்ற தெய்வீக அன்பை உலகெங்கிலும் துயரில் வாழும் மனுமக்களுக்கு 8 வகைகளில் சுமந்து செல்லும் ஓர் திட்டமாகும்!

1. "இயேசு அழைக்கிறார்" பொதுக் கூட்டங்கள்!
2. "இயேசு அழைக்கிறார்" வானொலி நிகழ்ச்சிகள்!
3. "இயேசு அழைக்கிறார்" பிரசங்க டேப்புகள்!
4. "இயேசு அழைக்கிறார்" கிராமபோன் L. P. இசைத்தட்டு!
5. "இயேசு அழைக்கிறார்" பத்திரிகை!
6. "இயேசு அழைக்கிறார்" புத்தக வெளியீடு— "குணமாக்கும் தழும்புகள்"
7. "இயேசு அழைக்கிறார்" கடித மூலம் தனிப்பட்ட மக்களைத் தொடுதல்!
8. வேத புத்தகம், புதிய ஏற்பாடு, சுவிசேஷ பிரதிகள் விநியோகம்!

இந்த எட்டு வகை முயற்சிகள் மூலம் 1973-ஆம் ஆண்டில் மட்டும் சுமார் 4,50,000 (குறைந்த பட்சம்) மக்கள் தொடப்பட்டுள்ளனர்! தேவனுக்கே மகிமை!

"ஆத்துமாக்களை ஆதாயப்படுத்திக் கொள்ளுகிறவன் ஞானமுள்ளவன்" (நீதிமொழிகள் 11:30) என வேதம் கூறுகிறது!

ஆத்தும ஆதாயத்தில் முழுமூச்சுடன் ஈடுபட்டுள்ள இந்த ஊழியத்திற்கு நன்கொடைகள் அனுப்பி நீங்களும் இதில் பங்கு பெறலாம்! நன்கொடைகள் அனுப்பவேண்டிய முகவரி மிகச் சுருக்கமானதே!

**"இயேசு அழைக்கிறார்"**
சென்னை-600 029, தமிழ்நாடு

தேவன் தாமே பரலோகத்திலிருந்து உங்களை ஆசீர்வதித்து பலனளிப்பாராக! (பிலி. 4: 17-19)

# குணமாக்கும் தழும்புகள்

ஆக்கியோன் :

சகோ. தினகரன்

வெளியீட்டாளர் :

" இயேசு அழைக்கிறார் "

தபால் பெட்டி 2472

சென்னை-600029

தமிழ்நாடு.

முதலாம் பதிப்பு : 2,000
(டிசம்பர் '72)
இரண்டாம் பதிப்பு : 6,000
(டிசம்பர் '73)
மூன்றும் பதிப்பு : 5,000
(செப்டம்பர் '74)



## பொருளடக்கம்!



டாக்டர் புஷ்பராஜ் M.B.C.

## தொகுப்பாளர் உரை !

உலகம் தோன்றியது முதல், இன்றுவரை வாழ்கின்ற மக்களில் ஏழையோ, செல்வந்தனோ. படித்தவனோ, படிக்காதவனோ, குடும்பஸ்தனோ, துறவியோ ஆக எவராக இருப்பினும் பயந்து நடுங்குவது வியாதி! வியாதி!! வியாதி!!!

இம்மண்ணில் பிறந்த அநேகரை எவ்வித வித்தியாசமுமின்றி நாட்கள், நேரம், வயது, ஆகிய எதையும் கணக்கிடாமல் எந்த நேரத்திலும் பற்றிப்பிடித்து வேதனைப்படுத்துகிற இந்த வியாதியை வராமல் தடுக்கவும் அல்லது குணப்படுத்தவும் உலகிலுள்ள அனைத்து விஞ்ஞானிகளும். வைத்திய நிபுணர்களும் இரவு பகலாக முயற்சி செய்து வருகிறார்கள் ஆனாலும் எவ்வளவு முயன்றும் எந்த நாடுமே இதில் வெற்றியடைய வில்லை!

குறிப்பிட்ட ஒரு வியாதியைத் தடுக்க வைத்திய நிபுணர்கள் முயலும்போது வேறு பல புதிய வியாதிகள் திடீரென்று தோன்றி அனைவரைத் திகைக்க வைப்பதைச் செய்தித் தாட்களில் அடிக்கடி வாசிக்கிறோம்!

எனவே வியாதி எதனால் வருகிறது? என்ற கேள்விக்கு விடையளிக்கும் முகமாக தேவனின் வரங்களைப் பெற்ற சகோ

தரன் தினகரன் 1970 ஆம் ஆண்டு மேட்டூர் C·I.G ஆலயத்தில் வேதாகமத்திலிருந்து ஆற்றிய சொற்பொழிவுகள் தான் இந்த புத்தக வடிவாக வெளிவருகின்றன! வியாதி வருவதற்குரிய எல்லாக் காரணங்களும் இப்புத்தகத்திலுள்ளன என்று நான் கூற மாட்டேன். ஆனால், அத்தியாவசியமான எல்லா சத்தியங்களும் அடங்கி உள்ளன என்று உறுதி கூறுவேன்.

சகோ. தினகரன் எந்த செய்தியையும் சுயமாகப் பேசுவதில்லை. மற்றவர்கள் எழுதிய புத்தகங்களைப் படித்து அதை வந்து பேசுவதில்லை. ஆண்டவருடைய பாதபடியில் பலமணி நேரம் காத்திருந்து ஆண்டவர் தம் ஆவியானவர் மூலம் வேதத்திலிருந்து என்ன சொல்லச் சொல்லுகிறாரோ அதையே பிரசங்கமாக எடுத்துச் சொல்லுகிறார். அந்த சத்தியங்களை அவர் இந்தியாவின் பல இடங்களிலும் பிரசங்கிக்கும் பொழுது கணக்கற்ற மக்கள் ஆண்டவர் இயேசுவின் கரங்களால் தம் பிணி நீங்கி சுகமடைந்ததை நான் நேரில் கண்டு மகிழ்ந்திருக்கிறேன்.

முதல் தடவை இப்புத்தகம் ''வியாதி எதனால் வருகிறது'' என்ற தலைப்பில் வெளி வந்தது, 2000 பிரதிகள் செலவாயின. இரண்டாம் முறை ''குணமாக்கும் தழும்புகள்'' என்ற பெயரில் 6000 பிரதிகள் வெளியிடப்பட்டன. இம்முறை 5000 பிரதிகள் வெளியிடப்படுகின்றன.

இந்த வெளியீட்டையும் உலக வழக்கப்படி, எந்த உலக கனவானின் ஞாபகமாகவோ அல்லது மறைந்த பெரியவர்களின் பெயரிலோ வெளியிடாமல் நம்மை எல்லாப் பாவங்களிலிருந்தும் இரட்சித்துத் தம் வேலைக்குப் பணியாட்களாகத் தெரிந்து கொண்ட, வானத்தையும் பூமியையும் படைத்த ஒப்பற்ற தேவ குமாரனாகிய இயேசு சுவாமியின் பொற்பாதத்தில் சமர்ப்பிக்கிறேன்.

கிறிஸ்து இயேசுவின் கிருபை உங்களனைவரோடும்
என்றென்றும் இருப்பதாக!

32, முகமதியர் தெரு,
பழைய சூரமங்கலம்,
சேலம்-5.

இப்படிக்கு:
கிறிஸ்துவின் பணியாள்
புஷ்பராஜ்



**Dr. K. T. THOMAS,**
(L.R.H.S., Cal.)
EXECUTIVE MEMBER
The Tamil Nadu Homeopathy Council.
Trustee : South Zone,
The Gideons International in India,
President : Y.M.C.A. Pollachi.

# FOREWORD

Alexis Carell, M.D., a medical scientist, and Nobe Prize winner says on the subject of prayer "Prayer is not only worship, it is the most powerful form of energy that one can generate. The influence of prayer on the human mind and body is demonstrable as that of secreting glands. Its results, can be measured in terms of increased physical buoyance, greater intellectual vigour, more stamina, and deeper understanding of the realities underlying human relationship."

Jesus our Lord, advocated the use of prayer and fasting for certain cases for He knew what is in man, sin being the root cause of all maladies. So, to find a real release for all our tensions, we must be willing to confess it to God and expose ourselves to His healing light, through His stripes on the cross of Calvary. Religion has an answer for all our troubles, specially for building better health.

I am very happy, our dear Brother Dhinakaran. has taken pains to bring out such an useful book with love and compassion for the suffering and needy. He deals with the subject with deep spiritual insight, and a prophetic vision. It has been my previlege to minister with Brother Dhinakaran in his campaigns both in India and in Sri. Lanka (Ceylon). His soul stirring Gospel messages, his "Kirtans" (Lyrics) have all been highly inspiring. His audiences, in thousands, at every place were thirlled and listened to God's Word spellbound from beginning to end. His healing prayers, with love and compassion, to the Heavenly Father, on behalf of the needy and suffering have wrought many a miracle, in bringing both physical and spiritual healing, and untold blessing to many. I am an eye-witness to some of them. Let the Lord's Name be glorified!

The secret of his fruitful ministry, as I have discovered through my close association with him, lies in his love and compassion for people and his constant communion with the living Lord and Saviour Jesus Christ. May the Lord bless his ministry and make it a great blessing for many!

This book came out first as "Why Sickness?" It had a modest circulation of 2000. On popular dimand it was issued again under the title "Healing Stripes" and 6000 copies were sold out at once. Hence this publication of 5000, again! An English version of the book will also be released soon.

I feel honoured in introducing this volume too to a world which will be all the better for a careful study and assimilation of its contents. May it bring peace and wholeness to many for the honour and glory of God, whose perfect will is that all should live a full and happy life. (3 John 2)

"Kirupa Nilayam"
90, Venkatesa Colony,
Pollachi, S. India.
27th September, 1974.

**Dr. K. T. Thomas**



# 1. இயற்கை !

''வானங்கள் கர்த்தருடையவைகள், பூமியையோ மனுபுத்திர ருக்குக் கொடுத்தார்'' (சங்கீதம் 115:16).

இன்று விஞ்ஞானம் எல்லாத் துறைகளிலும் அற்புதமாக முன்னேறி வருகிறது. சந்திரன், செவ்வாய் கிரகம் (Mars) போன்ற மற்ற கிரகங்களுக்கும் போக மனிதன் எடுக்கும் முயற்சிக்கு அது பெருந்துணை புரிகிறது. இவ்வாறு மற்ற கிரகங்களுக்குச் செல்ல மனிதன் முயற்சிப்பதற்கு அநேக காரணங்கள் உண்டு. அதில் ஒரு காரணம்; மற்ற கிரகங் களிலும் ஜீவராசிகள் உண்டோ என்று ஆராய்வதாகும். H. G. Wells போன்ற அநேக பெரியோர்கள் இதைக் குறித்து அழகிய கற்பனைகள் நிறைந்த கட்டுரைகள் வெளி யிட்டுள்ளதை நாம் அனைவரும் அறிவோம். ஆனால் நாம் மேலே குறிப்பிட்டுள்ள தேவ வசனமோ இன்று நாம் வாழும் உலகம் மட்டுமே மனுபுத்திரர் வாழ்வதற்கென தேவனால் அரு ளப்பட்டதென நமக்குத் திட்டமாய் அறிவிக்கிறது ஆகவே மானிடராகிய நாம் எத்தனை ஆண்டுகள் முயன்று, எத்தனை கிரகங்களுக்கு விஜயம் செய்தாலும், எந்த கிரகத்திலும் வேறொரு மனித வர்க்கத்தைக் காண்பதேயில்லை! தேவனு டைய வார்த்தை ஒருக்காலும் பொய்யாகாது !

பல வருடங்களுக்கு முன் இமயமலைத் தொடரில் மூடியுள்ள பனியில் அகன்ற மனித அடிச் சுவடுகள் காணப்பட்டன. எனவே அந்தப் பனிமலையில் அசாதாரண உருவமுள்ள ஒரு மனிதன் கட்டாயமாக இருக்கவேண்டும் எனப் பலர் அபிப்பிரா யம் தெரிவித்தனர். சிலர் அது பனிக் கரடியின் (Snow-Bear) அடிச்சுவடுகள் என்றனர். வேறு சிலரோ அது பனி மனி தனின் (Abominable Snowman) காலடிகள் தான் எனச் சாதிக்கின்றனர். எனினும் இதுவரை அம் மனிதன் யார் கண்ணிற்கும் தென்படவில்லை. மற்ற கிரகங்களில் மனிதனைத் தேடுவதும் அஃதே போன்றது தான்!

உலகங்களை தேவன் எவ்வாறு சிருஷ்டித்தார்? கீழ்க் கண்ட வேத வசனங்கள் தேவனுடைய வார்த்தையினால் அவை உண்டாயின எனப் பகருகின்றன.

எபிரெயர் 11:3: ‘‘விசுவாசத்தினாலே நாம் உலகங்கள் தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய் காணப்படுகிறவைகள் தோன்றப்படுகிறவைகளால் உண்டாகவில்லையென்றும் அறிந்திருக்கிறோம்.’’

சங்கீதம் 33:6: ‘‘கர்த்தருடைய வார்த்தையினால் வானங்களும், அவருடைய வாயின் சுவாசத்தினால் அவைகளின் சர்வ சேனையும் உண்டாக்கப்பட்டது.’’

2 பேதுரு 3 : 5: ‘‘பூர்வ காலத்தில் தேவனுடைய வார்த்தையினாலே வானங்களும், ஜலத்தினின்று தோன்றி ஜலத்தினாலே நிலை கொண்டிருக்கிற பூமியும் உண்டாயின’’.

ஆதியாகமம் : 1 : 3 வாசிக்கும்பொழுது அங்கு ஓர் உதாரணத்தைப் பார்க்கிறோம் தேவன் ‘‘வெளிச்சம் உண்டாகக்கடவது’’ என்று பகர்ந்தாராம். அப்பொழுது இருளிலிருந்து ஒளி தோன்றியதாம்! (II கொரி. 4:6). தேவனுடைய வார்த்தையின் வல்லமைதான் என்னே! இவ்வாறு தன் வார்த்தையினால் உலகங்களை உண்டாக்கின தேவன் ‘‘சர்வத்தையும் தம்முடைய வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராய்’’ இருக்கிறார் என்றும் வேதம் சொல்லுகிறது (எபிரெயர் 1:3). வானத்தில் மின்னும் நட்சத்திரங்களில் இரண்டு ஒன்றோடொன்று மோதிக் கொள்ளுமாயின் அதிலிருந்து விழும் அக்கினி உலகம் முழுவதையும் பட்சித்து விடுமென்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர். கணக்கற்ற நட்சத்திரங்கள் வானில் பளிச்சிடுகின்றன. அவைகளை ஒரு மனிதனாலும் எண்ணக் கூடாது எனவேதான் பக்தனாகிய ஆபிரகாமைப் பார்த்து தேவன் இவ்விதமாகக் கூறினார்: ‘‘நட்சத்திரங்களை எண்ண உன்னாலே கூடுமா?’’ (ஆதி 15:5). ‘‘வானத்து நட்சத்திரங்கள் எண்ணப் படாதது’’ என்று எரேமியா தீர்க்கத்தரிசியோடும் தேவன் அளவளாவினார்! (எரே. 33:22). ‘‘நீங்கள் வானத்து நட்சத்திரங்களைப் போல் திரளாயிருக்கிறீர்கள்’’ என்று மோசே தீர்க்கதரிசியும் இஸ்ரவேல் ஜனங்களைக் குறித்து வியந்து பாராட்டினார்! (உபாகமம் 1:10;10:22). ஆயினும் தேவனோ இந்த ‘‘நட்சத்திரங்களின் இலக்கத்தை எண்ணி, அவைகளுக்கெல்லாம் பேரிட்டு அழைக்கிறார்’’ (சங். 147:4). நட்சத்திரங்களுக்கும், சூரியனுக்கும் அவைகள் செல்லும் பாதையை நியமித்திருக்கிறார்! (சங். 19:1-6). கண்ணுக்குப் புலப்படாத இந்தப் பாதை அவருடைய வார்த்தையே!

கடற்கரையின் ஓரமாக நின்று ஒன்றன்பின் ஒன்றாய் தொடர்ந்து வரும் அலைகளைப் பார்க்கப் பார்க்க உள்ளம் பரவச மடைகிறது. எத்தனை மணி நேரம் ஆனாலும் அவ்வினிய காட்சியைக் காண்பதில் மனதிற்கும், கண்களுக்கும் சோர்வு ஏற்படுவதே இல்லை. ஆம்! இறைவனது சிருஷ்டிப்பில் சூழு றும் சமுத்திரம் இணையற்ற ஒன்றாகும். எனினும் ஓர் ஆழ்ந்த கருத்தை நம் மனம் கிரகிக்கக் கூடாமலேயே போகிறது. தம் பகைவரைக் கண்டு அவர்களை எதிர்த்துப் போரிட சீறி எழுந்த போர்ச் சேவகரைப் போல, வரிசை வரிசையாய் அதில் தோன்றும் அலைகள் குமுறி எழுந்தும் அந்தோ! கரையை வந் தெட்டியதும் தலை வணங்கி தாமாகத் திரும்பிப் போய் விடுவது எதனுல்? அலைகளுக்கு எல்லையாய் மணல் கரையை தேவன் வைத்ததினுலன்ரே! (எரே. 5:22; சங்கீதம் 104:9). "இம்மட் டும் வா, மிஞ்சி வராதே. உன் அலைகளின் பெருமை இங்கே அடங்கக்கடவது" என்ற தேவனுடைய வார்த்தையினுலன்ரே! (யோபு 38:11). ஆம்! அவர் வார்த்தைக்கு இயற்கையின் சக்திகளெல்லாம் கட்டுப்பட்டு மயங்கி நிற்கின்றன! இயற்கை சக்திகள் யாவும் கூட உதித்தது அவரிடம் இருந்தன்ரே! எனவே அண்ட சராசரங்கள் யாவும் இறைவனது தெய்வீக நியமத்திற்கு உட்பட்டு அவர் தம் வார்த்தையால் தம் தம் பாதைகளில் இயங்கி வருகின்றன !

"அகிலத்தை ஒரு சொல்லால் அமைத்தனையே,
அதையொரு பம்பரம் போல் இசைத்தனையே,
துகில் போலா காயமதை லகுவாய்ச் சமைத்ததிலே
ஜோதி பல மாதிரியாய்த் தூக்கி அங்கிலங்க வைத்த—சுய
அதிகாரா

கரைமதகற்ற குளம் புவியிலுண்டோ?
கடலுக்கவன் சொல்லன்றிக் கரைகளுண்டோ?
திரைதிரையாகச் சலம் மலைபோல் குவிந்தெழுந்தும்
சேதமின்றிப் பூதலத்தை மாதயவாய்ப் பாதுகாக்கும்—சுய
அதிகாரா

என்று பக்தனும் இக்கருத்தை உள்ளடக்கியே பரவசமாகப் பாடினுனன்ரே!

இப்பூவுலகை மனிதன் வாழ்வதற்கெனவே தேவன் உண் டாக்கியது உண்மையாகுல் உலகம் முழுவதும் இயங்கிவரும் அவருடைய விதிகளுக்கும் மனிதன் உள்ளடங்கி வாழ்வதும் தேவனுடைய தீர்மானமாயிருக்குமன்ரே! இயற்கையின் விதி களுக்கு கனம் கொடுக்கும் ஒரு மனிதன் தேவனையே கனப் படுத்துகிருன். தேவனும் அவனைக் கனப்படுத்தி சுகம், பெலன்

அருளுகிறார். ஆனால் அவ்விதிகளுக்கு எதிர்மாறாய் நடக்கிறவர்கள் தங்களுக்குத் தாங்களே அழிவை வருவித்துக் கொள்ளுகிறார்கள். பலமணி நேர உழைப்பிற்குப் பின் ஓய்வும், இரவில் அயர்ந்த நித்திரையும் மனிதன் பெற்று வாழ்வது தேவ நியமம். (சங். 104:20-24) அதை மறந்து, பகலின் கடின வேலைக்குப் பின், இரவில் சிற்றின்பத்தையும், களியாட்டத்தையும் நாடுவோர் தம் சரீரங்களுக்கே சத்துருக்களாய் மாறுகின்றனர். விஞ்ஞானம் முன்னேறி விட்டதால் தேவ நியமங்களுக்கு இனி கௌரவம் கொடுப்பது அவசியம் இல்லை என்று எண்ணுவோர் தங்களுக்குத் தாங்களே தீமையை வருவித்துக் கொள்ளுகிறார்கள். அறைகுறை மேதாவி ஒருவன் ஸர். ஐசக் நியூட்டன் என்ற பெயர் பெற்ற விஞ்ஞானி கண்டு பிடித்த புவிஈர்ப்பு சக்தியை (Law of Gravitation) தான் நம்புவதில்லை என்று பறை சாற்றினான். இதை நிரூபிக்க மக்களை ஒன்று திரட்டி உயர்ந்த மாடி ஒன்றில் ஏறி "நான் இப்பொழுது குதிப்பேன். ஆனால் நான் கீழே விழுவதில்லை. ஆகாயத்தில் அப்படியே நிற்பேன்" என்று சவால் விட்டான். மக்கள் யாவரும் இது உண்மையாய் இருக்குமோ வென வியந்து நிற்கையில் மாடியிலிருந்து தாவிக் குதித்தான். அந்தோ! அவன் கால்களைத் தாங்க வாயுமண்டலம் மறுத்தது. சில வினாடிகளுக்குள் பூமியை வந்தெட்டின அவன் உடல் நொறுங்கியது. உயிரற்ற அவனுடைய சடலத்தை திரண்டிருந்த மக்கள் வேதனையோடு தூக்கிச் சென்றனர். ஆம்! இயற்கையின் விதிகளுக்கு எதிர்த்து நிற்போர் தங்கள் சரீரங்களைத் தாங்களே கெடுக்கின்றனர்!

நம் அன்றாடக வாழ்வில் பாலில் சிறிது மோரிட்டு இரவில் வைத்து விடுகிறோம்! காலையில் அதே பாத்திரத்தில் உறைந்த தயிரைக் காண்கிறோம்! இட்லி, தோசைக்கென மாவு அரைத்து வைத்து இரவில் துயில்கிறோம்! காலையிலோ அந்த மாவு புளித்து பாத்திரத்தில் பெருகியிருப்பதைப் பார்க்கிறோம்! இது ஒரு விந்தையன்றோ! இந்த அற்புதச் செயலை நிகழ்விப்பது யார்? கண்ணுக்குப் புலப்படாத நன்மை செய்யும் அணுக்கள். இவைகளை ஆங்கிலத்தில் "பாக்டீரியாக்கள்" (Bacteria) என்று அழைக்கிறோம். இவ்விதம் நமக்கு ஒத்தாசை செய்யும் கணக்கற்ற அணுக்கள் உண்டு. அஃதே போன்று தீமை செய்யும் விஷக் கிருமிகளும் நோய்க் கிருமிகளும் பூமியில் நிறைந்து கிடக்கின்றன என்பதையும நாம் மறந்துவிடலாகாது. இவைகளே நம்முடைய சரீரங்களுக்கு தீங்கு விளைவிக்கின்றன. தீய கிருமிகளால் நமக்கு நோய்கள் வரும்பொழுது நம் சரீரத்தில் வைத்தியர்கள் மருந்துகளை உட்செலுத்தி, அக்கிருமிகளை அழித்து விடுகின்றனர். அப்பொழுது நம் உடல் நலம் பெறு

கிறது. இது சம்பந்தமாக சிலர் உள்ளத்தில் ஒரு கேள்வி எற்படுவது உண்டு. "தேவன் அன்புள்ளவர்" என்று வேதம் சொல்லுகிறது (I யோவான் 4:8,16). அவ்விதமாயின் அவரே இத்தீய கிருமிகளையும் படைத்ததேன்? நண்பா! உலகத்தையும், அதிலுள்ள ஜீவராசிகளையும் படைத்தது தேவனே! தோகை விரித்தாடும் மயிலையும், இனிமையாகக் கூவும் குயிலையும், பாடும் வான் குருவியையும், கபடற்ற புறாவையும் படைத்ததும் தேவனே. அதே தேவன்தான் மனிதனுக்கு இன்றும் சத்துருவாக விளங்கும் பாம்பு, தேள், பூரான் போன்ற விஷ ஜந்துக்களையும் படைத்தார். ஏன் என்று அவரை வினவுதல் இயலுமோ? அவருடைய அநந்த ஞானத்தின் ஆழத்தை நம்மால் அறிய இயலுமோ? வேதம் இதைக் குறித்து என்ன சொல்லுகிறது?

"ஆ! தேவனுடைய ஐசுவரியம், ஞானம், அறிவு என்பவைகளின் ஆழம் எவ்வளவாயிருக்கிறது! அவருடைய நியாயத்தீர்ப்புகள் அளவிடப்படாதவைகள். அவருடைய வழிகள் ஆராயப்படாதவைகள்!

கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன் யார்? அவருக்கு ஆலோசனைக்காரராயிருந்தவன் யார்?

தனக்குப் பதில் கிடைக்கும்படிக்கு முந்தி அவருக்கு ஒன்றைக் கொடுத்தவன் யார்?

சகலமும் அவராலும், அவர் மூலமாயும் அவருக்காகவும் இருக்கிறது. அவருக்கே என்றென்றைக்கும் மகிமையுண்டாவதாக! ஆமென்" (ரோமர் 11:33-36).

எனவே நாம் இறைவனைக் கேள்வி கேட்பதை விடுத்து அவர் நமக்கு அருளிய ஞானத்தைப் பயன்படுத்தி இவ்விஷக் கிருமிகளுக்கு நம்மை விலக்கிப் பாதுகாத்துக் கொள்வது நம்முடைய கடமை அன்றோ! நமக்குத் தீமை விளைவிக்கும் என்று அறியும் பொருட்களையும், காரியங்களையும் களைந்து நம்மைப் பாதுகாப்போம். அவ்வாறு செய்யாதவன் கட்டாயமாய் தீமைக்கு உட்படுவான். சாலமோன் ஞானியும் இதைக் கீழ்க்கண்டவாறு நகைச்சுவையுடன் விளக்குகிறார். "வழியே போகையில் தனக்கடாத வழக்கில் தலையிடுகிறவன் நாயைக் காதைப் பிடித்திழுக்கிறவனைப் போலிருக்கிறான்" (நீதி. 26:17).

சில மாதங்களுக்கு முன் பத்திரிகையில் ஒரு பரிதாபமான காரியத்தை வாசித்தேன். வட இந்தியாவில் ஓர் இடத்தில் ஒரு நாள் மிருகக் காட்சி சாலை ஒன்றில் வாலிபன் ஒருவன் நுழைந்தான். புலிகள் வைத்திருந்த கூட்டினருகே சென்றான். தன்னைப் போலவே மிருகக் காட்சி சாலைக்கு வந்த யாவரையும்

அழைத்து "நான் இப்பொழுது இந்தக் கம்பிகள் வழியே ஏறி புலிக்கூண்டினுள் குதிப்பேன். என் இஷ்ட தேவதையின் பெயரால் புலிகளோடு வெறுங்கையனாய் போரிட்டு ஜெயிப் பேன்" என வீராப்புப் பேசினான். ஏதோ வேடிக்கை செய் கிறான் என்று யாவரும் நகைத்தனர். ஆனால் கண் மூடித் திறப்ப தற்குள் அக்கூண்டின் மேல் ஏறினான். உள்ளேயும் குதித்து விட்டான். பலத்த கூச்சலிட்டு, புலிகளை சண்டைக்கு அழைத் தான். புலிகள் பேசாமலிருந்தன. இதற்குள் அங்கு ஓடிவந்த மிருகக் காட்சிசாலை சிப்பந்திகள் அவனைப் பேசாமலிருக்கும்படி கெஞ்சினார்கள். ஆனால் அவனோ தன் இஷ்ட தேவதையின் பெயரைச் சொல்லிக் கொண்டு புலிகள் மேல் பாய்ந்து ஒரு புலியின் கண்களைக் குத்தினான். மேற்கொண்டு என்ன நடந் திருக்கும் என்று விவரிக்க வேண்டிய அவசியமில்லை அல்லவா? அவனுடைய சரீரம் அந்த வனவிலங்குகளால் பீறுண்டு, கிழித் தெறியப்பட்டது. நம்மால் இயன்றவரை தீய கிருமிகளுக்கு தூரமாய் விலகியிருப்பது நம் சரீரத்துக்குச் செய்யும் மிகப் பெரிய நன்மையன்றோ! இந்த இடத்தில் தான் அநேக தேவ னுடைய பிள்ளைகள் தவறுகிறார்கள். நோயினால் வாடும் மற்ற வர்களுக்காக ஜெபிக்கும் பொழுதும், நோயாளிகளுக்கு கிறிஸ்து வைப் பற்றி அறிவிக்கும் பொழுதும், பிரசங்கிக்க பல இடங் களுக்குச் செல்லும் பொழுதும் தங்கள் இஷ்டம்போல் அஜாக் கிரதை உள்ளவர்களாக நடந்து கொள்ளுகிறார்கள். யாராவது புத்தி சொன்னாலும் "கர்த்தர் என் பரிகாரி, கர்த்தர் என்னைக் கைவிடமாட்டார்" என்று வீண் வாதம் பேசுவார்கள். "உன் தேவனாகிய கர்த்தரைப் பரீட்சை பாராதிருப்பாயாக" (மத். 4:7) என்ற தேவ கட்டளையை மறந்து விடுகிறார்கள். முடிவில் நோய்க் கிருமிகள் அவர்களைப் பற்றும் பொழுதோ "மற்றவர் களுக்காக நான் செய்யும் வேண்டுதல்களைக் கேட்டு தேவன் எத்தனையோ பேருக்கு சுகம் கொடுத்து வருகிறார். ஆனால் எனக்கு ஏன் இப்படி நோய் வந்தது? என் சுகத்திற்காக நான் செய்யும் ஜெபத்தை மட்டும் தேவன் ஏன் கேட்கவில்லை?" என்று மனம் நொந்து கொள்ளுகிறார்கள். இதினிமித்தமாக கர்த்தர் பேரிலுள்ள தங்கள் விசுவாசத்தையே கூட முழுவதும் இழந்து, அவரை மறுதலித்துப் பின்வாங்குவோரும் உண்டு. அந்தோ! இந்தப் பரிதாப நிலைமை நம் ஒருவருக்கும் வரா திருக்க கர்த்தர் கிருபை புரிவாராக!

இந்த அத்தியாயத்தை முடிக்கும் முன்பாக வேறொரு காரி யத்தையும் கண்ணோக்குவோம். சர்க்கரை ஆலை ஒன்றிற்கு ஒரு முறை சென்றிருந்தேன். அங்குள்ள அதிகாரி ஒரு

வரிடம் பேசிக் கொண்டிருந்த பொழுது அவர் என்னிடம் ''எங்கள் ஆலேயில் உள்ள இயந்திரங்களுக்கு மூன்று மாதம் ஓய்வு கொடுத்து விடுவேன்'' என்ருர். ஏனென்று கேட்டேன். அவர் ''ஒன்பது மாதங்களாக இந்த இயந்திரங்கள் இரவும், பகலும் ஓய்வின்றி ஓடிக் கொண்டிருக்கின்றன. அப்படியே விட்டுவிட்டால் வெகு சீக்கிரத்தில் அவை தேய்ந்து உபயோக மில்லாமலேயே போய்விடும். எனவே தான் மூன்று மாதங்கள் அவைகளுக்கு ஓய்வு கொடுத்து முற்றிலும் எண்ணெயினுல் கழுவி புதுப்பிக்கிருேம்'' என்று சொன்னுர். அந்த யந்திரங் களுக்கு அவர்கள் ஓய்வு கொடுக்கிருர்கள். ஆனுல் நம் சரீரத் திற்கு ஓய்வு எங்கே? வருடத்தில் 365 நாட்களும் அது ஓய்வு இன்றி வேலே செய்து கொண்டே இருக்கிறது. எனவே ஏதோ ஓர் அவயவம் பழுதுபடுமானுலும் சரீரம் முழுவதும் நோய்வாய்ப்படுகிறது (1 கொரி. 12:26). அம்மனிதன் பிணி யாளியாகித் தவிக்கிருன். யோபு சொல்வதைப்போல் நாம் ஒவ் வொருவரும் திரும்பிவராத பாதையில் போய்க் கொண்டிருக் கிருேம் (யோபு 10:20,21). இரவும், பகலும் உழைக்கும் நம் சரீரம், நம் சிருஷ்டிகரிடம் திரும்பிப் போவதற்குமுன் இளேப் படைந்து விடுகிறது. பக்தனுகிய எலிசாவும் தன் மரணத்திற்கு முன்னே நோய்வாய்ப்பட்டிருந்தான் என்று நாம் வாசிக்க வில்லேயா? (2 ராஜா. 13:14). எனவே நம்முடைய முதிர்ந்த வயதில் சரீரத்தின் அவயவங்கள் பழுதுபட்டு, நாம் பெலவீன ராக மாறுகையில் நாம் கிலேசப்படாதிருப்போமாக! அவைகள் நம் பரம வாசஸ்தலம் செல்லுவதற்கு குறிப்பிடப்பட்ட நாள் மிகவும் சமீபம் என்றுதான் காண்பிக்கின்றன. சரீரத்தில் முதிர் வயதில் ஏற்படும் ஒவ்வொரு பலவீனமும் நம்மைக் கிறிஸ்துவண்டை அழைத்துச் செல்லும் தேவ தூதர்களென நாம் கருதுவோம்!

பவுல் சொன்ன வார்த்தைகளே நினேவு கூறுவோம். ''ஆனபடியினுலே நாங்கள் சோர்ந்து போகிறதில்லே; எங்கள் புறம்பான மனுஷனுனது அழிந்தும், உள்ளான மனுஷனுனது நாளுக்கு நாள் புதிதாக்கப்படுகிறது. மேலும் காணப்படுகிற வைகளே நோக்கியிருக்கிற நமக்கு, அதிசீக்கிரத்தில் நீங்கும் இலேசான நம்முடைய உபத்திரவம் மிகவும் அதிகமான நித்திய கன மகிமையை உண்டாக்குகிறது. ஏனெனில் காணப்படுகிற வைகள் அநித்தியமானவைகள். காணப்படாதவைகளோ நித்தியமானவைகள்'' (2 கொரி. 4:16-18).

ஆம்! முதிர் வயதில் நாம் அனுபவிக்கும் இலேசான உபத்திரவங்கள் அதி சீக்கிரமாக நம்மை கிறிஸ்துவின் பாதத்

கரையை திருத்தமாகக் கொண்டு சேர்க்கும்! நாம் மகிழ்ச்சி யாகவே நம் ஓட்டத்தை முடிப்போம்!

நண்பரே! தேவனுடைய இயற்கை நியமங்களுக்கு நீர் அடங்கி நடவாததால் இன்று வேதனையினால் வாடுகிறீரோ? உம் சரீரத்தைப் பேணவேண்டிய விதமாக பேணாதபடியால் இன்று பலவீனராக அங்கலாய்க்கிறீரோ? கலங்காதிரும்! கர்த்தர் இயேசு உம் குறைகளை மன்னிக்க தயை பெருத்திருக்கிறார் (ஏசாயா 55:7). ஒரு குறிப்பிட்ட நேரத்தை அல்லது நாளை நியமித்து அவர் பாதத்தில் தியானத்தில் உட்கார்ந்து உம் கவனக் குறைவுகளை, "தேவனுடைய ஆலயமாகிய" உம்முடைய சரீரத்தை (1 கொரி. 3:16, 17)-கவனியாமற் போன குற்றத்தை-கண்ணீரோடு அறிக்கை செய்வீராக! அப்பொழுது தேவன் உம்மேல் மனமிரங்குவார். உம்மை சுகமாக்குவார். தேவனுடைய ஊழியக்காரனாகிய எப்பாப்பிரோதீத்துவின்மேல் நோய் வந்தபொழுது, அவன் அநுபவத்தை பவுல் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார்.

"அவன் வியாதிப்பட்டு மரணத்திற்கு சமீபமாயிருந்தது மெய்தான், ஆகிலும், தேவன் அவனுக்கு இரங்கினார். அவனுக்கு இரங்கினதுமல்லாமல் துக்கத்தின்மேல் துக்கம் எனக்கு உண்டாகாதபடிக்கு எனக்கும் இரங்கினார்" (பிலிப்பியர் 2:27). தீத்துவுக்கு மனமிரங்கின தேவன் உமக்கும் மனமிரங்குவார். அவர் "இரக்கமும், மனவுருக்கமும், நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர். தீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவருமான தேவன்" அல்லவோ! (யோனா 4:2). கட்டாயமாக உமக்கும் மனம் இரங்குவார். கலங்காதிரும்!

முதிர் வயதில் பலவீனத்தினால் வாடும் நண்பரே! உம் தைரியத்தை இழந்து விடாதிரும்! கிறிஸ்துவின் பாதத்தில் உம் நேரம் முழுவதையும் கழிப்பீராக! 120 வயதுள்ள மோசேயின் "கண்கள் இருளடையவுமில்லை. அவன் பெலன் குறையவுமில்லை" (உபாகமம் 34:7) என்று எழுதியிருக்கிறதே! "அவ்விதமாகவே எனக்கும் மனம் இரங்கி உம் பெலனைத் தாரும்" என்று கண்ணீர் சிந்துவீராக! அப்பொழுது சங்கீதம் 103:4,5இல் எழுதி இருக்கிறபடி உம்முடைய பலத்தை திரும்பவும் உமக்குத் தருவார். கடைசி வினாடி வரை உம்மைக் காத்துக் கொள்ளுவார்.

சுருங்கக் கூறின் "அநாதி தேவனே நமக்கு அடைக்கலம். அவருடைய நித்திய புயங்கள் நமக்கு ஆதாரம்" (உபாகமம் 33:27).





''இயேசு அழைக்கிறார்'' கூட்டங்கள்!—கொழும்பு (இலங்கை)



"சிறுவர்களை அணைத்துக் கொண்டு ஆசீர்வதித்த" இயேசு கிறிஸ்துவின் கரங்களால் தொடப்பட்டு உடன் சுகமடைந்து உபயோகிக்க முடியாத கரத்தை மகிழ்ச்சியோடு உயர்த்திக் காட்டும் சிறுவன் ஒருவன்! (பொள்ளாச்சி)



தேவனுடைய பரிசுத்த ஆவியின் வல்லமையால் உள்ளத்தின் ஆழத்தில் உள்ள எண்ணங்களையும் ஜெபங்களையும் வெளிப்படுத்தும் காட்சி! (யோவான் 1:47-50) (மதுரை)



# 2. பாவம்!

''என்னை விட்டு விலகி நீ செய்துவருகிற உன் துர்க் கிரியை களினிமித்தம் சீக்கிரத்தில் கெட்டுப்போய் அழியுமட்டும் நீ கைவிட்டுச் செய்வதெல்லாவற்றிலும் கர்த்தர் உனக்குச் சாபத்தை யும், சஞ்சலத்தையும், கேட்டையும் வரப் பண்ணுவார்.

நீ சுதந்தரிக்கும் தேசத்தில் கர்த்தர் உன்னை நிர்மூலமாக்குமட் டும் கொள்ளை நோய் உன்னைப் பிடித்துக் கொள்ளப்பண்ணுவார்.

கர்த்தர் உன்னை ஈளையினாலும், காய்ச்சலினாலும், உஷ்ணத்தி னாலும், எரிபந்தத்தினாலும், வறட்சியினாலும், கருக்காயினாலும், விஷப் பனியினாலும் வாதிப்பார். நீ அழியுமட்டும் இவைகள் உன்னைப் பின் தொடரும்'' (உபாகமம் 28:20-22).

தேவனாகிய கர்த்தர் தம் அடியவரை அவர்களுக்கு வாக் களித்த தேசத்தில் கொணர்ந்து சேர்த்தபின், அன்னாருக்கு ஆலோசனையாகக் கூறின வார்த்தைகளில் தான் மேல் சொன னவைகளும் அடங்கியுள்ளன. ''உன் துர்க்கிரியைகள் உனக்கு நோயைக் கொண்டுவரும்'' என்பதே அதன் சாரம்!

தேவன் மனிதனாகப் பூமியில் ''இயேசு'' என்ற பெயரில் உலாவினபொழுது அவர் வாழ்வில் நடந்த இரு சம்பவங்கள் கூட இதே சத்தியத்தை உறுதியாக்குகின்றன. படுக்கையில் கிடந்த ஒரு திமிர்வாதக்காரனை ஒரு சமயம் அவ ரிடம் கொண்டு வந்தார்கள். இயேசு அவனுடைய நோயைப் பற்றி ஒரு வார்த்தை கூட சொல்லாமலும், உடன் குண மாக்காமலும் அவனைப் பார்த்து ''உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன'' என்றார். பின்னரே ''நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப்போ'' என்றார் (மத்தேயு 9:1-7).

இதே போன்று பெதஸ்தா என்னும் ஒரு குளத்தினருகே படுத்திருந்த 38 வருடமாய் வியாதி கொண்டிருந்த ஒரு மனி தனைக் குணமாக்கிய பின் ''இதோ, நீ சொஸ்தமானாய், அதிக கேடானதொன்றும் உனக்கு வராதபடி இனிப் பாவஞ்செய் யாதே'' என்றார் (யோவான் 5:1-14). மேற்கண்ட உதாரணங் கள் பாவத்திற்கும், சரீர நோய்க்கும் ஆன்மீகமாக ஒரு பந்த முண்டு என சுட்டிக் காட்டுகின்றன அன்றோ! எனவே இக் கொடிய சத்துருவை ஒழிக்கும் வழியை சற்றே ஆராய்வோம்!

## பாவம் என்பது என்ன ?

''நியாயப்பிரமாணத்தை (தேவ கட்டளையை) மீறுகிறதே பாவம்'' (I யோவான் 3:4).

''அநீதியெல்லாம் பாவம்'' (I யோவான் 5:17).

''விசுவாசத்தினாலே வராத யாவும் பாவம்'' (ரோமர் 14:23).

''நன்மை செய்யாமற் போவது பாவம்'' (யாக்கோபு 4:17; ஆதி. 4:7).

''பட்சபாதம் செய்வது பாவம்'' (யாக். 2:8,9).

''தீய நோக்கம் பாவம்'' (நீதி. 24:9).

மேற்கண்ட வசனங்கள், பாவம் உலகில் மனித வர்க்கத்தில் எவ்விதங்களில் காணப்படுகிறது என்று விளக்குகின்றன. இதைப் போன்ற இன்னும் வேறு பல காரியங்களையும் வேதத்தில் காணலாம். சுருங்கக் கூறின், பாவம் கொடியது! கனம். பால் கடம்பவனம் என்ற பக்தர் பாவத்தின் கொடுமையை இவ்வாறு விவரித்தார். ''பரிசுத்தனாகிய தேவனை பரலோகத்திலிருந்து பூமிக்கு மனிதனாகத் தோற்றமெடுத்து வரும்படி செய்து, கொடிய சிலுவைக்கு இழுத்துச்சென்று அங்கே அவரை ஆணிகளால் அடித்துக் கொலை செய்யும்படி செய்த பலத்த சக்தியே பாவம்''. பாவத்தின் தீய வலிமைதான் என்னே! எனவே அந்த வல்லமை மனிதனுடைய சரீரத்தில் நோய்களைக் கொண்டு வருவதிலும் வியப்பே இல்லையன்றோ!

## பாவம் உலகில் தோன்றிய விதம் !

''இதோ, தேவன் மனுஷனைச் செம்மையானவனாக உண்டாக்கினார்; அவர்களோ அநேக உபாய தந்திரங்களைத் தேடிக் கொண்டார்கள்'' (பிரசங்கி 7:29).

யாக்கோபு 1 : 14, 15 பாவம் எவ்வாறு தோன்றுகிறதென்று விளக்குகிறது. ''அவனவன் தன்தன் சுய இச்சையினாலே இழுக்கப்பட்டு, சிக்குண்டு, சோதிக்கப்படுகிறான். பின்பு இச்சையானது கர்ப்பந் தரித்து, பாவத்தைப் பிறப்பிக்கும். பாவம் பூரணமாகும் போது, மரணத்தைப் பிறப்பிக்கும்''.

இச்சையே பாவத்திற்குக் காரணம் என்று விளக்கப்பட்டிருக்கிறது. ''தேவன் தம்முடைய சாயலாக மனுஷனை சிருஷ்டித்தார் அவனை தேவ சாயலாகவே சிருஷ்டித்தார்; ஆணும், பெண்ணுமாக அவர்களை சிருஷ்டித்தார்'' (ஆதி 1:27). மனிதனைத் தன்னைப் போல பரிசுத்தனாக உண்டாக்கினார் (எபே. 4:24). அவன் தேவ பக்தியுள்ள சந்ததியைப் பெறவும், இரவும் பகலும் தன்னோடு இருந்து தன்னைத் துதித்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும் விரும்பி, அவனைப் படைத்தார் (மல்கியா 2:15; ஏசாயா 43:21: ஆதி. 3:8). தம்மால் சிருஷ்டிக்கப்பட்ட ஆதாமையும், ஏவாளையும் மற்ற சிருஷ்டிகளுக்கு எஜமான்களாக்கினார். எல்லாவற்றையும் அவர்களுடைய பாத படிகளுக்குக் கீழாக்கினார். அழகிய ஒரு தோட்டத்தில் தன்னோடு வைத்திருந்தார். ஒரு குறிப்பிட்ட விருட்சத்தின் கனியை மட்டும் புசிக்கவேண்டாம் என்று கட்டளையிட்டிருந்தார் ஆனால் அவர்களோ இச்சையினால் மிகுந்து அந்த ஒரே ஒரு கட்டளையை மீறினார்கள்! (ஆதி 2:16, 17; 3:6). தேவனுடைய பிரசன்னத்தை இழந்தார்கள். அவர்களுடைய இச்சையினிமித்தமாக தேவனுடைய கட்டளையை மீறி பாவம் செய்தார்கள். இதைத்தான் ''இச்சையினால் உலகத்தில் உண்டான கேடு'' (2 பேதுரு 1:4) என்று வேதம் வருணிக்கிறது. அவர்களுடைய பாவம் எல்லோரையும் தொடர்ந்து பிடித்தது. ''எல்லாரும் வழிதப்பி ஏகமாய் கெட்டுப் போனார்கள்'' (ரோமர் 3:12). ''எல்லாரும் பாவஞ்செய்து தேவ மகிமையற்றவர்களானார்கள்'' (ரோமர் 3:23). தேவன் பரிசுத்தர்! தீமையை பார்க்கமாட்டாத சுத்தக் கண்ணர்! அநியாயத்தை நோக்கிக் கொண்டிருக்க மாட்டார் (ஆபகூக் 1:13). ''அவர் நீதியுள்ள நியாயாதிபதி. நாள்தோறும் பாவியின்மேல் சினங்கொள்ளுகிற தேவன்'' (சங் 7:11). ஆகவே மனிதன் தேவனுடைய சமூகத்திலிருந்து துரத்திவிடப்பட்டான் (ஆதி. 3 : 24). துரத்திவிடப்பட்டது மல்லாமல் ''பூமி உன்னிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்'' என்ற சாபத்தையும் பெற்றுக் கொண்டான். அந்த சாபம் பலுகிப் பெருகி நோய் என்ற சாபத்தையும் மனிதனுடைய வாழ்க்கையில் கொண்டு வந்தது.

## ஒரே ஒரு பாவம் !

சில சமயங்களில் என்னிடம் கேட்கப்படுகிற கேள்வி ஒன்றுண்டு. ''ஐயா! ஆதாமும், ஏவாளும் செய்த ஒரே ஒரு பாவத்திற்காகவா அன்புள்ள தேவன் இவ்வளவு பெரிய தண்டனையைக் கொடுத்துவிட்டார்?'' என்பதே அந்த கேள்வி. சகோதரனே!

பாவத்திற்கு அளவில்லை. பெரிய பாவம், சிறிய பாவம் என்று வேறுபாடுமில்லை. உதாரணமாக, பொட்டாசியம் சயனைடு என்ற ஒரு விஷப் பொருளை ஒரு குண்டூசியின் நுனியில் தொட்டு நாக்கில் வைத்தால், அந்தக் குண்டூசியை நாக்கிலிருந்து எடுப்பதற்கு முன்பதாக அவன் மரிப்பான். அதைப் போல்தான் ஒரு படி அரளி விதையை அரைத்துக் குடிக்கிறவனும் துடிதுடித்து மரிக்கிறான் விஷம் விஷமே! அளவைப் பற்றி கவலையில்லை. ''செத்த ஈக்கள் தைலக்காரனுடைய பரிமள தைலத்தை நாறிக் கெட்டுப்போகப் பண்ணும்; ஞானத்திலும் கனத்திலும் பேர்பெற்றவனைச் சொற்ப மதியீனமும், அப்படியே செய்யும்'' (பிரசங்கி 10:1).

**பாவம் வசிக்கும் ஸ்தலம்!**

பாவம் நம் இருதயத்தில் தான் வசிக்கிறதென்று வேதம் சொல்கிறது உள்ளத்திலிருந்தே கொடிய விபச்சார எண்ணங்களும், சிந்தனைகளும் புறப்பட்டு மனிதனைத் தீட்டுப்படுத்தும் என்று ஆண்டவராகிய இயேசு சொன்னார் (நீதி. 20:9; மாற்கு 7:20-27; ரோமர் 7:15;17,23). இந்த மூன்று வசனங்களும் பாவம் நம்முடைய இருதயத்திலிருந்து வெளிப்பட்டு நம்முடைய அவயவங்களை சிறைப்படுத்தி முடிவில் நம்மையே தனக்கு அடிமையாக எடுத்துக் கொள்ளுகிறது என்கின்றன. எனவேதான் தேவ குமாரனாகிய இயேசு ''பாவஞ்செய்கிறவன் எவனும் பாவத்திற்கு அடிமையாயிருக்கிறான்'' (யோவான் 8:34) என்று மொழிந்தார். சமீபத்தில் எனக்கு வந்த கடிதங்களை நான் பார்க்கும் பொழுது ஒரு வாலிபன் இவ்விதமாய் எழுதியிருந்தான்.

''ஐயா! நான் புகைப் பிடிக்கும் பழக்கத்தை விட்டுவிட எவ்வளவோ முயற்சிக்கிறேன். என்னால் விட முடியவில்லையே. ஒரு வழி சொல்லுங்கள்.''

குடிப் பழக்கத்தில் மிகுதியும் மூழ்கிவிட்ட ஒரு குடும்பஸ்தர் இவ்வாறு சொன்னார். ''தம்பி! நான் குடிப்பது என் சரீரத்திற்கு தீமை விளைவிக்கிறது. என் குடும்பத்தை நாசமாக்குகிறது. ஆனால் அதை விட்டுவிட என்னால் முடியவில்லையே. நான் என்ன செய்வேன். நீங்கள் எனக்காக ஜெபிக்க மாட்டீர்களா?''

விபச்சாரத்தின் பிடியில் நன்றாக சிக்கிவிட்ட ஒரு சகோதரன் கீழ்க்கண்டவாறு புலம்பினார்.

''சார், நான் விரும்பி இப்படிச் செய்யவில்லை. ஏதோ ஒரு சக்தி என்னை ஆட்டிப் படைக்கிறது. என் கண்களுக்கு

என் மனைவியைவிட மற்றப் பெண்களே அழகாய் காணப்படு கிருர்கள். ஆகவேதான் விழுந்து விடுகிறேன். எனக்கும் உய்வு உண்டா?''

மேற்கண்ட மூன்று உதாரணங்கள் மட்டுமல்ல! இன்னும் கணக்கற்ற உண்மை சம்பவங்களை என்னுல் கூற முடியும். இவர்கள் யாவரையும் ஆட்டிப் படைத்து அவர்கள் வாழ்க்கையை நரகமாக்குவது எது? அவர்களுடைய உள்ளத்திற்குள் நுழைந்து அவர்களுடைய அவயவங்களில் வெளிப்படும் பாவமே. இத்தகைய மக்களுக்கு உய்வு உண்டா? அதை இவ்வத்தியாயத்தின் இறுதியில் காணலாம்!

## பாவங்களின் வகைகள் !

தீர்க்கதரிசியாகிய மோசேக்கு, அதரிசனமான தேவன் தன்னை வெளிப்படுத்துகையில் கீழ்க்கண்டவாறு பகர்ந்தார். ''அக்கிரமத்தையும், மீறுதலையும், பாவத்தையும் மன்னிக்கிறவர். குற்றவாளியை குற்றமற்றவனக விடாமல், பிதாக்கள் செய்த அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலும், பிள்ளைகளுடைய பிள்ளைகளிடத்திலும் மூன்ரும், நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்கிறவர்'' (யாத். 34:7). அவர் நீதியுள்ள நியாயாதிபதி பாவத்தை அவர் தண்டித்தே ஆகவேண்டும். நான்காம் தலைமுறை மட்டும் தண்டிப்பாராம்! இந்தத் தண்டனை பலவிதங்களில் மனிதனைத் தொடர்ந்து பிடிக்கிறது. மோசேயோடு தேவன் பேசும் பொழுது ''மனுஷனுக்கு வாயை உண்டாக்கினவர் யார்? ஊமையனையும், செவிடனையும், பார்வையுள்ளவனையும், குருடனையும் உண்டாக்கினவர் யார்? கர்த்தராகிய நான் அல்லவா'' (யாத். 4:11). ''ஐசுவரியவானும், தரித்திரனும் ஒருவரையொருவர் சந்திக்கிருர்கள். அவர்கள் அனைவரையும் உண்டாக்கினவர் கர்த்தர்'' (நீதி 22:2). சில குடும்பங்களில் தொடர்ந்து சந்ததி முழுவதையும் நோய் பிடிக்கிறது. சில குடும்பங்களில் காரணமில்லாமல் வறுமை வாட்டுகிறது. 'தேவன் இவ்விதமாகக் குருடரையும், செவிடரையும் உண்டாக்குவானேன்? அன்புள்ள தேவன் அப்படிச் செய்யலாமா?'' என்ற ஒரு கேள்வி இதனுல் எழும்புகிறது.

ஒரு சமயம் ஒரு பெரிய நூல் நூற்கும் தொழிற் சாலையைப் பார்க்கச் சென்றிருந்தேன். அங்கே மேற்கூரையினடியில் குறுக்கும், நெடுக்குமாக பல குழாய்கள் செல்வதைக் கண்

டேன். அக்குழாய்களின் வேலையைப் பற்றி நான் விசாரித்த பொழுது அங்கிருந்தவர் பின்வருமாறு கூறினர்.

''ஐயா! சில சமயங்களில் இயந்திரங்களில் வெப்பம் மிகுதியாகி அபாயக் குறிக்கு (Danger Point) மேல் செல்வதுண்டு. அப்பொழுது உடனே இந்தக் குழாய்கள் வெடித்து அதிலிருந்து தண்ணீர் பாய்ந்து வரும். அந்தத் தண்ணீர் வெப்பத்தைத் தணித்து இயந்திரங்களையும், தொழிற்சாலைகளையும் விபத்திலிருந்து தடுக்கிறது'' என்றார்.

அதைப் போலவே மனிதனுடைய அக்கிரமம் மிகுதியாகும் பொழுது, அது தேவனுடைய சமூகத்தில் சென்று அவனுக்குரிய ஆக்கினையை இழுத்துக் கொண்டு வருகிறது. அவன் பின் சந்ததிகளும், மனந்திரும்பாது பாவத்தில் ஜீவித்தால் அவர்களையும் அது தொடர்ந்து பிடிக்கிறது. ஒரு சமயம் ஒரு சகோதரி தெரியாமல் தன் வீட்டினருகே கடந்து சென்ற மின்சாரக் கம்பியின்மேல் சலவை செய்த துணியை உலர வைப்பதற்காக போட்டார்கள். உடனே மின்சாரம் அவர்கள்மேல் பாய்ந்து அவர்களை இழுத்தது. அவர்கள் கூச்சலைக் கேட்டு அவர்கள் வீட்டிலிருந்த சிலர் ஓடி வந்தார்கள். செய்வதறியாது ஒவ்வொருவராக அவர்களைப் பிடித்து இழுக்க முயன்றார்கள். அவர்களையும் சேர்த்து மின்சாரம் இழுத்துக் கொண்டது. இவ்விதமாகவே பாவமும் பரம்பரையாக மக்களை வாட்டுகிறது.

ஒரு சமயம் ஒரு சகோதரி இவ்விதமாய் சொன்னார்கள். ''ஐயா! எங்கள் வீடு ஒரு பெரிய மாளிகை தான்! எங்களைப் பார்ப்போர் எங்களை பாக்கியவான்கள் என்கிறார்கள் ஆனால் எங்களுக்கு ஒரு வேளை கூட புசிக்க உணவில்லை. எவ்வளவு பணம் வந்தாலும் இருக்குமிடம் தெரியாமல் போய்விடுகிறது'' என்றார்கள். அவர்களுடைய முன்னோர்களைப் பற்றி நான் விசாரித்த பொழுது நான் அறிந்து கொண்டதாவது: அவர்களுடைய முன்னோர்கள் எத்தனையோ பேர்களுடைய வாழ்க்கையைக் கெடுத்து இந்த சொத்தை சுதந்தரித்தார்கள் என்பதே.

வேறொரு பெண் இவ்விதமாய் சொன்னாள். ''ஐயா! எங்கள் வீடு பெரிய வீடு. ஆனால் வீட்டிலிருக்கும் அனைவருக்கும் ஏதோ ஒரு நோய் உண்டு; இனந்தெரியாத ஒருவித திகில் எங்களெல்லாரையும் பிடித்து ஆட்டுகிறது'' அவர்களிடமும் அவர்கள் முன்னோர்களைப் பற்றி விசாரித்த பொழுது அந்தப்

பெண்ணின் மாமனர் இச்சொத்தை வேறு ஒருவரிடமிருந்து பொய் வழிகளில் அபகரித்துக் கொண்டார் என அறிந்தோம்.

இன்று நாம் பாவத்தில் வாழ்ந்தால் அந்தப் பாவத்தின் தண்டனை நம்மை மட்டுமல்ல, நம் பின் சந்ததியையும் தொடருகிறதாய் இருக்கிறதென்று நாம் இதன்மூலம் அறிகிறோம் அல்லவா? சிலர் எனக்கு இவ்விதமாய்க் கடிதம் எழுதுகிறார்கள். "சகோதரனே! நான் என்ன பாவம் செய்தேன். என் குழந்தை கண்ணில்லாமல் பிறந்திருக்கிறதே! தவமிருந்து பெற்ற ஆண் குழந்தை ஒரு கை இல்லாமல் பிறந்திருக்கிறதே!" இவைகளை வாசிக்கும் பொழுது என் உள்ளம் கலங்குகிறது. என்றாலும் யாத். 34:7இல் சொல்லப்பட்ட தேவனுடைய குணாதிசயங்களை யாரால் மாற்ற முடியும். நாம் தேவனுக்கு பயந்து வாழ்வோமாக !

முன்னோர்களது பாவங்களின் பலனை நாம் சுமப்பது உண்மையானால், எசேக்கியேல் 18:20இல் குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதில்லை என்று எழுதியிருக்கிறதே! அது எவ்வாறு? என்று ஒரு கேள்வி எழக்கூடும் அதற்கு விடை அதே அதிகாரத்தில் 17ஆம் வசனத்தில் எழுதி இருக்கிறது. தகப்பனுடைய பாவங்களிலிருந்து, முன்னோர்களின் பாவங்களிலிருந்து ஒருவன் தேவனிடம் மனந்திரும்பினால் அவன் தப்பித்துக் கொள்ளுகிறான்! இதன் விவரத்தை நாம் இறுதியில் தீர்க்கமாய் காணலாம்.

## பெற்றோரின் பாவம் !

"அப்பொழுது கர்த்தர் உரியாவின் மனைவி தாவீதுக்குப் பெற்ற ஆண் பிள்ளையை அடித்தார் அது வியாதிப்பட்டுக் கேவலமாயிருந்தது". 2 சாமு. 12:15 மேற்கண்ட வசனம் தாவீது ராஜாவிற்குப் பிறந்த ஒரு குழந்தை வியாதிப்பட்டு மரிக்கக் காரணம் என்ன என்று விளக்குகிறது. தாவீதுக்கு நியாயமானபடி மணமுடித்த மனைவியிருக்க, அவளை விட்டு விட்டு பலாத்காரமாக அவன் அபகரித்த உரியா என்பவனுடைய மனைவியின் மூலம் பிறந்த குழந்தை இது. மாற்கு 10:13-16 வரையுள்ள வசனங்கள் கிறிஸ்து சிறு குழந்தைகள் மேல் எவ்வளவு அன்பு கொண்டிருந்தார் என்பதையும், அவர்களை எவ்வாறு அணைத்துக் கொண்டு ஆசீர்வதித்தார் எனவும் விளக்குகின்றன. தன் சமூகத்தில் தன் ஆலயத் திருப்பணி விடைக்கென்று அன்னாளால் கொண்டு வந்து விடப்பட்ட

சாமுவேல் என்னும் குழந்தையின் மேல் தேவன் எவ்வளவு பிரியமாயிருந்தார் என்று 1 சாமு. 3ஆம் அதிகாரத்தில் நாம் வாசிக்கிறோம். ஆம்! குழந்தைகள் பாவமற்றவர்கள்! தேவன் அவர்கள்மேல் அன்பாயிருக்கிறார். அங்ஙனமிருக்க இந்த ஒரு குழந்தை மட்டும் தேவனுடைய கரத்தினால் அடிக்கப் படக் காரணம் என்ன? தாவீதின் பாவம் அன்றோ! ஆம்! பெற்றோரின் பாவம் பிள்ளைகளைத் தாக்குகிறது.

அநேக பெற்றோர்கள் எனக்கு இவ்விதமாகக் கடிதம் எழுதுகிறார்கள். "ஐயா, என் மகன் எவ்வளவோ சம்பாதிக்கிறான். ஆனால் எல்லாவற்றையும் குடித்து, வெறித்துத் தீர்த்து விடுகிறான். கேட்டால் எங்களையே அடிக்க வருகிறான". "ஐயா என் மகளைக் கிளியைப் போல வளர்த்தேன. கஷ்டப்பட்டு படிக்க வைத்தேன். எங்களைக் காப்பாற்றுவாள் என்று எவ்வளவோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவளோ யாரோ ஒருவனுடன் ஓடிவிட்டாள்". இது மட்டுமல்ல. இன்று சமுதாயம் முழுவதுமே, "மாணவர்கள் பள்ளிக்கூடங்களில் தொல்லை கொடுக்கிறார்கள். கல்லூரிகளில் "ஸ்டிரைக்" பண்ணுகிறார்கள்," என்று பலவாறு குற்றம் சாட்டுகிறது. இந்த மாணவர்களின் தனிப்பட்ட வாழ்க்கையை, அவர்கள் பெற்றோர்களின் வாழ்க்கையை சற்று நாம் விசாரித்தால் ஒன்றைக் காணலாம். அவர்கள் பெற்றோர்களும் ஒழுங்கீனமாக நடப்பார்கள். புருஷனும், மனைவியும் விரோதிகள் போல தினமும் அடித்துக் கொள்வார்கள். புருஷன் அல்லது மனைவி ஊதாரியாயிருப்பார்கள். பிள்ளைகள் மேல் துளி அன்புகூட காண்பிக்காமல் வாழ்க்கை நடத்துவார்கள். தெய்வ பயமின்றி வாழ்வார்கள். அவர்கள் பிள்ளைகளின் சுபாவமும் அப்படியே இருப்பதில் வியப்பென்ன? தாவீதின் பாவத்தினால் அவன் குழந்தை நோய்வாய்ப்பட்டது போல இப்படிப்பட்ட மக்களுடைய குழந்தைகளும் நோய்வாய்ப்படுவதில் வியப்பென்ன? சமூகத்திற்கே ஒரு சாபமாகவும், அவர்கள் வாழ்வதில் வியப்பென்ன? ஒவ்வொரு கிறிஸ்தவ திருமணத்தின் போதும் சங்கீதம் 128 வாசிக்கப்படுகிறது "உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப் போலிருப்பார்கள்" என்று அவர்களுக்கு ஆசீர்வாதமும் கூறப்படுகிறது. ஆனால் அந்தோ! சிலருக்குக் குழந்தைகளே பிறப்பதில்லை. சிலருக்குப் பிறக்கும் குழந்தைகளோ ஏலியின் குமாரரைப் போல் "பேலியாளின் மக்களாய்" (I சாமு. 2:12) இருக்கிறார்கள். இதற்கு ஒரே காரணம்: சங். 128இன் முதலாம் வசனத்தின்படி "கர்த்தருக்குப் பயந்து அவர் வழிகளில்" அவர்கள் நடவாமல்

போவதே. 1961ஆம் வருடம் ஏப்ரல் மாதம் முதல் தேதி என் முதல் குழந்தை இறந்தது. என் பெற்றோரும், என் மனைவியின் பெற்றோரும் கண்ணீர் விட்டு அழுதார்கள். ''நான் உமக்குத் தொண்டு செய்கிறேனே, நூற்றுக் கணக்கான மக்களுக்கு உம்முடைய சுவிசேஷத்தை அறிவிக்கிறேனே, எனக்கு ஏன் இப்படி நேரிட வேண்டும்?'' என்று நானும் கதறினேன். என் உள்ளத்தின் ஆழத்தில் தேவன் என்னோடு பேசினார். நான் செல்வதே சரியான மார்க்கம் என்று எண்ணியிருந்தேன். தேவனுடைய ஆவியானவரால் நிறைந்து ஊழியம் செய்கிற மக்களைப் பற்றி தவறான எண்ணங் கொண்டவனாயிருந்தேன். அதை அவரிடம் அறிக்கை செய்தேன். அவர் எனக்கு மன்னித்தார். வேறு இரண்டு குழந்தைகளைக் கொடுத்தார். என்னையும் அப் 10:38இல் சொல்லியிருக்கிறபடி, தன்னுடைய வல்லமையினாலும், பரிசுத்த ஆவியானவராகிய கர்த்தராலும் நிறைத்து (II கொரி. 3:17), முன்னிலும் அதிகமாக என்னை ஆத்துமாக்களின் இரட்சிப்புக்காக, ஆறுதலுக்காக, சரீர சுகத்திற்காக உபயோகிக்க ஆரம்பித்தார்!

என் அருமைப் பெற்றோரே! உங்கள் பிள்ளைகள் நோயற்று வாழ, பாக்கியவான்களாயிருக்க நீங்கள் தேவனைத் தேடுவது அவசியமென்று உணருவீர்களா? நோயினால் வாடும் பிள்ளைகளே! உங்கள் பெற்றோர்களின் பாவத்தினால் நீங்கள் அனுபவிக்கும் பிணிகளிலிருந்து விடுதலை வேண்டுமா? கிறிஸ்துவினிடம நீங்கள் வாருங்கள். அவர் உங்கள் பாவங்களை முதலாவது மன்னிக்கட்டும். பின்பு உங்கள் பெற்றோர்களால் வந்த சாபத்தையும் அவர் நீக்குவார். இதைப்பற்றியும் இப்புத்தகத்தின் இறுதியில் தெளிவாகக் காணலாம்.

## நம் பாவம்!

''உங்கள் பாவம் உங்களைத் தொடர்ந்து பிடிக்கும்''
(எண். 32:23).

''துன்மார்க்கனை அவனுடைய அக்கிரமங்களே பிடித்துக் கொள்ளும். தன் பாவக்கயிறுகளால் கட்டப்படுவான்''
(நீதி. 5:22).

''பாவிகளைத் தீவினை தொடரும்'' (நீதி. 13:21).

''சிலருடைய பாவங்கள் வெளியரங்கமாயிருந்து நியாயத்தீர்ப்புக்கு முந்திக்கொள்ளும். சிலருடைய பாவங்கள் அவர்களைப் பின்தொடரும்'' (I தீமோ. 5:24).

மேற்கண்ட வசனங்கள் பாவம் செய்யும் மனிதனை அவனுடைய பாவங்களே எவ்விதம் கட்டுகின்றன; எவ்விதம் தொடருகின்றன என விளக்குகிறதன்றோ! நாம் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கண்டதுபோல, இயேசு சுவாமியும் பிணியாளிகளைக் குறித்து அவர் தம் நோய்க்குக் காரணம் அன்னாருடைய பாவங்களே என சுட்டிக் காட்டினாரன்றோ! (மத்தேயு 9:2; யோவான் 5:14). ''நிர்மூடர் தங்கள் பாதக மார்க்கத்தாலும், தங்கள் அக்கிரமங்களாலும் நோய் கொண்டு ஒடுங்கிப் போகிறார்கள்'' (சங். 107:17). ஆம்! முடிவிலே உன் மாமிசமும், உன் சரீரமும் உருவழியும்போது நீ துக்கித்து ''ஐயோ! போதகத்தை நான் வெறுத்தேனே, கடிந்து கொள்ளுதலை என்மனம் அலட்சியம் பண்ணினதே, என் போதகரின் சொல்லை நான் கேளாமலும் எனக்கு உபதேசம் பண்ணினவர்களுக்கு என் செவியைச் சாயாமலும் போனேனே!'' என்று நீ கதறும் நாள் வரும் (நீதி. 5:11-13). முதலில் பாவம் இனிமையாயிருக்கும். பெற்றோருக்குத் தெரியாமல் நீ பாவம் செய்யும்போது இனிமையாயிருக்கும். ஆனால் முடிவில் அது பாம்பைப் போல் உன்னைத் தீண்டும். விரியனைப் போல் உன்னைக் கடிக்கும் என்று வேதம் சொல்லுகிறது (நீதி. 23:27-32). அன்பானவர்களே! அநேகர் இன்று நோயினால் கஷ்டப்படுகின்றனர். அது அவர்களின் பாவத்தாலேயே வந்தது. மறைவான பாவங்களுக்கு என்னை நீங்கலாக்கும் என்று சங்கீதக்காரன் கதறுகிறான். ஒருவன் தேவனுடைய ஆலயத்தைக் கெடுத்தால் அவனை தேவன் கெடுப்பார். நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்களே (I கொரி. 3:16, 17). தேவனுடைய கரத்திலிருந்தே ஒரு கெடுதல் வருமானால் நாம் எவ்விதமாக சகிக்கப் போகிறோம்?

பிரசங்கி 7:13இல் சாலமோன் இவ்விதமாகச் சொல்லுகிறார். ''அவர் கோணலாக்கினதை நேர்மையாக்கத் தக்கவன் யார்? அவர் நேராக்கியதைக் கோணலாக்குபவன் யார்?'' அவர் ஒரு காரியத்தைக் கோணலாக்கினால் அதன் பின் புலம்புவதால் என்ன பிரயோஜனம்? அதன் பின் கதறுவதில் என்ன பிரயோஜனம்? 'கண் கெட்டபின் சூரிய நமஸ்காரமா?' என்று பழமொழி சொல்லுவார்கள். நோய் வந்த பிறகு ''ஐயோ நான் இவ்விதமாய் என் சரீரத்தைக் கெடுத்துவிட்டேனே. ஐயோ! ஏன் இவ்விதமாகத் துர்க்குணத்தை எனக்குள் வைத்தீர்தேவனே?'' என்று அழுது புலம்புவதில் என்ன பிரயோஜனம்?

நீ இன்று நோய்வாய்ப்பட்டிருக்கக் காரணம் உன் மறைவான பாவமே. அது நியாயத்தீர்ப்புக்கு முன் செல்லுகிறது

(1 தீமோ. 5:24). ஒரு சமயம் நானும் என் மனைவியும் ஓர் ஊருக்குச் சென்றிருந்தோம். அங்கே ஒரு சகோதரனைக் கண்டோம். அவர் சொன்னார், "ஐயா, கல்யாணம் ஆன நாள் முதல் இன்று வரை ஒரு நாள் கூட சந்தோஷம அனுபவிக்கவில்லை" என்று தன் மனைவியை வைத்துக் கொண்டே சொன்னார். காரணம்! தகாத நடத்தையினால் அந்தப் பெண்ணின் சரீரத்தில் இருந்த நோய் கணவரையும், ஒரே ஒரு குழந்தையையும் தொற்றிக் கொண்டது நண்பா! பாவத்தில் ஜீவிக்கிறாயா? மறைவான பாவத்தில் ஜீவிக்கிறாயா? ஒரு நாள் அது வெளியே வரும் என்பதை மறவாதே. நீதி. 11:22இல் "தன் மதிகேட்டில் நடக்கிற அழகுள்ள ஸ்திரீ, பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்கு சமானம்" என்று எழுதப்பட்டிருக்கிறது. பன்றியைப் பிடித்து ஓர் அழகான மூக்குத்தியை அதன் மூக்கில் போட்டுப் பாருங்கள். யாராவது போட்டதுண்டா? அல்லது போடும்போது அதைப் பார்த்துப் "பன்றி என்ன அழகாக இருக்கிறது!" என்று யாராவது சொன்னதுமுண்டா? பல வருடங்களுக்கு முன்னதாக ஒரு தாய் என்னிடம் வந்து கண்ணீர் விட்டாள். "என் மகள் மிகவும் அழகானவள், ஆனால் அதினிமித்தமாக இன்று கண்ணீர் வடிக்கிறேன். தினமும் வேலைக்குப் போய் வரும்போது யார், யாரையோ கூடடிக் கொண்டு வருகிறாள்" என்று சொன்னார்கள். பின்னர், என்னைத் தன் வீட்டிற்கு ஜெபிப்பதற்காக அழைத்தார்கள். சரி என்று ஒருநாள் போனேன். நான் அந்த அம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தேன். ஜெபிக்க நான் வந்துள்ளேன் என்று அறிந்தும்-வெகு நேரம் ஆகியும் அந்தப் பெண் வீட்டிற்கு வரவில்லை. நானும புறப்பட்டு வந்து விட்டேன். நான் வெளியே போகும்போது அந்தப் பெண் ஒரு வாலிபனுடன் பேசிக் கொண்டு எதிரில் வந்தாள். நான் பார்த்துவிட்டு "எனக்கு நேரமில்லை" என்று சொல்லி வந்து விட்டேன். வருடங்கள் கடந்தன. ஆனால் தேவன் அதை மறக்கவில்லை. கலா. 6:7 என்ன சொல்கிறது? "மனுஷன் எதை விதைக்கிறானோ, அதையே அறுப்பான் " "மோசம் போகாதிருங்கள், தேவன் தம்மை பரியாசம் பண்ண வொட்டார்; மனுஷன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான்". நீ எதை விதைக்கிறாயோ, சகோதரனே! அதையே அறுப்பாய். அந்தப் பெண்ணிற்கு விவாகம் ஆனது. வருடங்கள் கடந்து போயின. குழந்தையும் பிறந்தது. திடீரென்று அந்த பெண்ணிடமிருந்து எனக்குக் கடிதம் வந்தது, அதில், "என் புருஷன் எனக்குத் தெரியாமல் வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு வாழ்கிறார். என்னிடம் வருவதேயில்லை, வேதனையில் கண்ணீர் விடும்

எனக்காக ஜெபியுங்கள்'' என எழுதி இருந்தாள்! நீ எதை விதைக்கிறுயோ அதையே அறுப்பாய். உன் வாழ்க்கையில் மறைத்து வைத்திருக்கும் பாவம் ஒருநாள் வெளியே வரும். நீ புலம்புவாய். நீ கதறுவாய் (கலா. 6:7).

''தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்'' (நீதி. 28:13), என்ற கடின எச்சரிக்கையை மறந்து வாழ்வாருமுண்டு. அந்தப் பாவமே கொஞ்சம் கொஞ்ச மாக அவர்களைக் கொல்லுகிறது. ஆப்பிரிக்கா தேசத்தில் நடந்த ஒரு சம்பவத்தைக் கேள்வியுற்றேன். அந்நாட்டில் ஒரு வகை குறுகிய பாம்பு உண்டாம். இரவு நேரத்தில் அது தன்னை வளைத்துக் குறுக்கிப் படுத்துக் கொள்ளுமாம். இருளில் அதன் உடல் மின்னுவது வைர நெக்லஸ் போன்று காட்சி அளிக்குமாம். அவ்விடத்திற்கு புதிகாக, ஒருசமயம், வெளி நாட்டு மாது ஒருவர் சென்றாராம் அவருக்கு இக்காட்சி பரவச மூட்டியது. ''இது ஓர் நெக்லஸே; என்னே என் பாக்கியம்'' எனப் பேருவகை கொண்டு அதை அவசரமாகக் கையில் எடுத்தாராம்! பின்னும் ''வேறு எவரேனும் இதைக் கண்டுவிட்டால் இதைக் கைப்பற்றி விடுவாரே'' என்ற பயத்தால் அதைத் தன் வாய்க்குள்ளும் போட்டுக் கொண்டாராம்! அந்தோ! மறு விநாடியே அந்த அரவம் அவரைத் தீண்ட அங்கேயே அவர் மாண்டாராம்! பாவத்தின் கொடுமையும் பாம்பின் விடத்தைவிட எத்துணையும் குறைவுள்ளது அன்று! சிறிது சிறிதாக உள்ளத்தைக் பாழாக்குகிறது. மறைவான பாவங்களுக்கு விலக்கி நம்மைத் தேவன் தாமே காப்பாராக!

## பாவ விமோசனம் !

அன்பான வாசகரே!

முன்கண்ட பகுதிகளில் மூன்று வகைப் பாவங்களைப் பற்றிக் கண்டோம்.

1. முன்னோர்களின் பாவம்.
2. பெற்றோர்களின் பாவம்.
3. அவரவர் செய்த பாவம்.

இம்மூவகைப் பாவங்களில் ஏதாகிலும் ஒன்று காணப் படாத மனுஷன் உலகிலிருப்பதில்லை. ''பாவஞ் செய்யாத மனுஷன் இல்லையே'' (I இராஜா. 8:46).

‘‘ஒரு பாவமும் செய்யாமல் நன்மையே செய்யத்தக்க நீதிமான் பூமியில் இல்லை’’ (பிர. 7:20).

‘‘ஜீவனுள்ள ஒருவனும் உமக்கு முன்பாக நீதிமான் அல்ல’’ (சங். 143:2).

‘‘தேவன் ஒருவர் தவிர நல்லவன் ஒருவனும் இல்லையே’’ (மாற்கு 10:18).

‘‘என் இதயத்தை சுத்தமாக்கினேன், என் பாவமறத் துப்புரவானேன் என்று சொல்லத்தக்கவன் யார்?’’ (நீதி. 20:9).

இந்த வேத வசனங்களை ஆராயுங்கால் பாவமற்ற மனிதன் உலகில் இல்லையென உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவாய் விளங்குகிறதன்றோ! காரியம் இவ்வாறாயின் மனுக்குலம் இப்பாவ விலங்கிலிருந்து விடுதலை பெறுவதுதான் எங்ஙனம்! வேதம் என்ன சொல்லுகிறது? ‘‘இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்’’ (I யோவான் 1:7). இந்த வசனத்தில் ‘‘சகல பாவங்களையும்’’ என்ற வார்த்தைகள் குறிப்பிடத்தக்கன. மேற் சொல்லிய மூவகைப் பாவங்களையும் நொடியில் நீக்க வல்லது இயேசு கிறிஸ்துவின் இரத்தம்! எத்தனை ஆச்சரியம் பாருங்கள்! ஒரே ஒருவருடைய இரத்தம் உலக மாந்தர் அனைவருடைய பாவங்களையும் நீக்குவது வியக்கப்படத்தக்க காரியமேயாகும். இதை சற்றே ஆராய்வோம்.

‘‘இரத்தஞ் சிந்துதலில்லாமல் மன்னிப்பு உண்டாகாது’’ (எபி. 9:22). ‘‘ஆத்துமாவிற்காகப் பாவ நிவர்த்தி செய்கிறது இரத்தமே’’ (லேவி. 17:11). என்ற தெய்வ நியமத்திற் கிணங்கவே நம் முன்னோர்கள் ஆடு, மாடு போன்ற மிருக ஜீவன்களை தெய்வத்திற்குப் பலியாகச் செலுத்தி வந்தார்கள். ஆயினும் அந்தப் பலிகள் அவர்களுடைய பாவங்களை நிவர்த்தி செய்யவில்லை. பாவம் செய்யாமலிருப்பதற்கு வேண்டிய பலத்தையும், மனத்தூய்மையையும் அந்தப் பலிகள் அளிக்க முடியவில்லை. எனவே தான் வருடந்தோறும் அதே பலிகளை மறுபடியும் மறுபடியும் செலுத்தி வந்தனர் (எபி. 10:1-14). இதைக் கண்ணுற்ற சிருஷ்டிகர்த்தாவாகிய தேவன் தாமே மனுடாவதாரம் கொண்டு பூமியில் இறங்கி வந்தார். அவர் வந்த நோக்கம் ‘‘அநேகரை மீட்கும் பொருளாகத் தம்முடைய ஜீவனைக் கொடுக்கவே’’ (மத். 20:28; யோவான் 10:15).

ஏனென்ருல் ''தேவன் ஒருவர் தவிர நல்லவன் ஒருவனு மில்லையே'' (மாற்கு 10:18). அவர் தமது தூய இரத்தத்தைச் சிந்தி எல்லாருடைய பாவங்களுக்காகவும். தன்னையே ஜீவ பலியாக அர்ப்பணித்தார். இவ்வாறு பூமியில் மனிதனாக உலா வுங்கால் அவருக்கிடப்பட்ட பெயர்தான் ''இயேசு''. அப்பெய ரின் அர்த்தமே ''இரட்சகர்'' என்பது தான். சிலுவையில் சிந்தப்பட்ட இயேசுவின் இரத்தம், பரிசுத்த தேவனுடைய இரத்தமாகும். எல்லோரையும் சிருஷ்டித்தவரும் எல்லோருக் கும் பிதாவுமாகிய இறைவனுடைய இரத்தமாகும் அது எந்த மனிதனையும், எவ்வகைப் பாவத்திலிருந்தும் கழுவி சுத்திகரிக்க வல்லமையுள்ள இரத்தமாகும். இதையே, 'இயேசு கிறிஸ்து வின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி சுத்திகரிக்கும்!'' என்ற வசனம் விளக்குகிறது.

ஒரு சமயம் வேகமாகக் கார் ஓட்டிய குற்றத்திற்காக ஒரு நீதிபதியின் முன் பிரசித்தி பெற்ற சுவிசேஷகர் ஒருவர் நிறுத்தப்பட்டாராம். நீதிபதி அவரை நன்கு அறிந்திருந்தார். எனினும் அக்குற்றத்திற்கேற்ற அபராதத்தை அவருக்கு விதித்தார். விசாரணை முடிந்து யாவரும் கலைந்து சென்றனர். நீதிபதியும் நியாயாசனத்திலிருந்து கீழே இறங்கி நேரடியாக அபராதம் விதிக்கப்பட்ட சுவிசேஷகரை நோக்கிச் சென்ருர். ''ஐயா! குற்றத்திற்கேற்ற அபராதத்தை வழங்கினேன். ஆனுல் உம் நண்பர் என்ற முறையில் அந்த அபராதத்தை நானே செலுத்தித் தீர்ப்பேன். நீங்கள் சமாதானத்தோடு வீடு திரும்பலாம்'' என்று சொன்ருராம். ''தேவன் நீதியுள்ள நியாயாதிபதி'' (சங். 7:11) அதே சமயத்தில் மானிடர் யாவருக் கும் அன்புள்ள தகப்பன்! எனவே, தான் சிருஷ்டித்த மக்க ளுக்காக பாவத்தின் தண்டனையை தன் மேல் ஏற்றுக்கொண் டார். பாவங்களிலிருந்து எல்லோரையும் மீட்டுக்கொண்டார். ''இன்றும் தேவன் சிலுவையில் எனக்காகவே தம் இரத்தத் தைச் சிந்தினுர்.'' என்று நம்பி, ''உம் தூய இரத்தத்தால் என்னைக் கழுவும்'' என்று வேண்டிக் கொள்ளுகிற எவரையும் அந்த இரத்தம் சுத்திகரிக்கிறது. பாவங்களை அறவே நீக்கு கிறது.

1970ஆம் ஆண்டு புது டெல்லியில் ராஜ்கட்டத்திலுள்ள நம் தேச தந்தை மகாத்மா காந்தியின் சமாதியை காணும் சிலாக்கியம் எனக்குக் கிடைத்தது. அங்கே சுற்றி அமைந் துள்ள சுவர்களில் அவரது பொன் மொழிகள் செதுக்கப்பட் டுள்ளன. அதில் ஒன்றின் கருத்து ''நீ எதைச் செய்தாலும்

துயரத்தில் வாடும் இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களுக்கு அச்செயல் பயன்தருமா என்று எண்ணிப் பிறகே அதைச் செய்'' என்பதே! இந்த வாக்கு என் உள்ளத்தை உடைத்தது! ''அவர் எவ்வளவாகத் தேச மக்களை நேசித்தார், என்னை நேசித்தார். நமக்காகத் தம் உயிரையே கொடுத்தார்'' என நினைத்தேன். கண்கள் கலங்கின. ஆம்! அவரது தியாகத்தால் கோடா கோடி இந்திய மக்கள் சுதந்திரமடைந்தார்கள்! அது போன்றே. தேவன் சிலுவையில் தம்மையே அர்ப்பணித்தால் உலகம் முழுவதிற்கும் உய்வு உண்டானது.

இயேசு கிறிஸ்து சிலுவையில் பாவங்களை மட்டும் சுமக்கவில்லை. பாவத்தின் வழிவந்த சாபமாகிய நம் நோய்களையும் அவர் சுமந்தார். ''கிறிஸ்து நமக்காக சாபமானார்'' (கலா. 3:13) என்ற வசனத்தின்படி சகல சாபங்களையும் அவர் சுமந்தார். பாவத்தால் பாவப் பழக்கத்தால் ஒரு மனிதனுக்குப் பிணி வருமாயின் அவன் செல்ல வேண்டிய இடம் சிலுவையே! சிலுவையில் இயேசு சிந்திய இரத்தம் இன்றும் தன்னை நாடி வருபவர்களின் பாவங்களை நீக்குகிறது. பாவத்தின் வழியாக நோய் வந்திருக்குமாயின் அந்த நோய்களையும் நீக்குகிறது. இறைவனுடைய அன்புதான் எத்தனை வலிமையுள்ளது! நண்பரே! இன்று இயேசுவின் இரத்தம் உம்மை சுத்திகரிக்கும்படிக்கு விண்ணப்பஞ் செய்வீராக! அவர் இரத்தம் உம் பாவங்களை நீக்கும்! சரீர நோய்களை சுகமாக்கும்! கர்த்தர் உம்மை ஆசீர்வதிப்பாராக!

''சிலுவையண்டையில் நம்பிவந்து நிற்கையில்
பாவபாரம் நீங்கி வாழ்வடைந்தேன்!
எந்த நேரமும் எனதுள்ளத்திலும்
பேரானந்தம் பொங்கிப் பாடுவேன்!''



வியாதியினாலும், பலவித உபத்திரவங்களினாலும் வாடும் மக்களுக்காக சகோதரன் கண்ணீரோடு ஜெபிக்கும் காட்சி!



திரு வசனத்தைக் கேட்க ஆவலோடு கூடிய மக்கள் திரள்!
(குவைட், அரேபியா)



'' இயேசு அழைக்கிறார் '' கூட்டங்கள் !—கல்லுக் கூட்டம்
(தமிழ்நாடு)



# 3. அசுத்த ஆவிகள் அல்லது பிசாசுகள்!

"கலிலேயா நாடெங்கும் அவர்களுடைய ஜெப ஆலயங்களில் அவர் (இயேசு) பிரசங்கம் பண்ணிக் கொண்டும், பிசாசுகளைத் துரத்திக் கொண்டும் இருந்தார்!" (மாற்கு 1:39).

"நான் (இயேசு) இன்றைக்கும், நாளைக்கும் பிசாசுகளைத் துரத்தி, வியாதியுள்ளவர்களைச் சொஸ்தமாக்கி, மூன்றும் நாளில் நிறைவடைவேன்" (லூக்கா 13:32).

தேவ குமாரனாகிய இயேசுவின் வாழ்க்கைச் சரிதையில் நாம் கண்ணுறும் பல நற்செயல்களில் ஒன்று, மக்கள் சரீரத்தில் புகுந்து துன்புறுத்திய கொடிய பிசாசுகளைத் துரத்தி மக்களை அவர் உய்வித்ததாம்! மாற்கு 1:21-28ல் அடங்கியுள்ள வேதபாகத்தில் ஒரு காட்சி! இயேசுவின் கீர்த்தி எங்கும் பரவிக் கமழ ஆரம்பித்த நாட்களில் கப்பர்நகூம் பட்டணம் வருகிறார்! அங்குள்ள ஜெப ஆலயத்தில், ஓய்வு நாளில் பிரவேசித்து, "அதிகாரமுடையவராய்" அவர்களுக்குப் போதிக்கிறார் அவருடைய போதகம் மக்களை வியப்பில் ஆழ்த்துகிறது! யாவர் உள்ளத்திலும் உவகை பெருக்கெடுத்தோடுகிறது! ஜெப ஆலயம் முழுவதும் தேவ பிரசன்னமும், மக்கள் உள்ளத்தில் பக்தி பரவசம் நிரம்பி வழியும் ஓர் உன்னத நேரம்! அமைதி! அமைதி! தெய்வீக அமைதி!

மறுவினாடி மக்கள் தம் செவிகளையும், பக்தர்கள் உள்ளங்களையும் கிழித்தெறியும் வண்ணம் ஒரு பயங்கரக் குரல் அங்கு ஒலிக்கிறது!

"ஐயோ! நசரேயனாகிய இயேசுவே! எங்களுக்கும், உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை இன்னார் என்று அறிவேன். நீர் தேவனுடைய பரிசுத்தர்."

யாவர் கண்களும் அதிர்ச்சியோடு, அக்குரல் வந்த திசையை நோக்குகின்றன! அவர்கள் கண்டது என்ன! கர்ஜிக்கும் சிங்கத்தையல்ல! பிளிறும் யானையையல்ல! கனைக்கும் போர்க் குதிரையையல்ல! வழக்கமாக ஆலயத்திற்கு

வந்து மற்றவர்களுடன் வழிபடும் மிகப்பழக்கமான ஒரு மனிதனே! இன்றோ அவன் முகம் வேறு விதமாக, பரிதாப மாக. வேதனை நிறைந்ததாக, பயமுள்ளதாகக் காணப்படு கிறது. உடல் நடுங்குகிறது! மட்டுமல்ல! அவன் ஒரு தன்னந்தனி மனிதனாயிருக்க "எங்களுக்கு" எனப் பன்மையில் பேசுகிறான். மக்கள் உள்ளத்தில் கிலி! மறுபக்கம் ஓர் கேள்விக் குறி! "இம்மனிதனுக்கு இன்று என்ன நேர்ந்தது?"

இயேசுவின் பார்வை அவன் மேல் விழுகிறது! "நீ பேசாமல் இவனை விட்டுப் புறப்பட்டுப் போ!" என்ற ஆணித் தரமான அதிகாரக்குரல் அவர் வாயிலிருந்து புறப்பட்டு வரு கிறது. "உடனே அந்த அசுத்த ஆவி அலைக்கழித்து, மிகுந்த சத்தமிட்டு, அவனை விட்டுப் போய்விட்டது!" அவன் முகத் தோற்றம் மாறுகிறது. தெய்வீக அமைதி அதில் குடிகொள்ளு கிறது. "இவர் அதிகாரத்தோடே அசுத்த ஆவிகளுக்கும் கட்டளையிடுகிறார் அவைகள் இவருக்குக் கீழ்ப்படிகிறதே!" என மக்களும் வியந்தனர்!

நண்பா! மேற்கண்ட நிகழ்ச்சியின் வாயிலாக, அம் மனிதனை அவ்வாறு கூச்சலிடச் செய்தது, அவனுக்குள் இருந்த "அசுத்த ஆவி" யென எளிதில் ஊகிக்கலாம்! அதன் அடிமைத்தனத்தில் அவன் பல ஆண்டுகள் கழித்திருக்கக் கூடும்! வெளித் தோற்றத்தில் அவன் மற்ற மனிதர்களைபோல வே சாதாரணமாகக் காணப்பட்டிருந்தாலும் அவன் உள்ள மோ அமைதியற்று தவித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும் அல்லவா!

"சத்துரு (பிசாசு) என் ஆத்துமாவைத் தொடர்ந்து, என் பிராணனைத் தரையோடே நசுக்கி, வெகு காலத்துக்கு முன் மரித்தவர்கள் போல் என்னை இருளில் இருக்கப் பண்ணுகிறான். என் ஆவி என்னில் தியங்குகிறது. என் இருதயம் எனக்குள் சோர்ந்து போகிறது" (சங். 143:3, 4).

"சத்துரு சிங்கம் போல் என் ஆத்துமாவைப் பிடித்துக் கொண்டுபோய், விடுவிக்கிறவன் இல்லாமையால், அதைப் பீறுதபடிக்கு என்னைத் தப்புவியும்" (சங். 7:2): மேற்கண்ட வசனங்களில் விவரிக்கப்பட்டுள்ள அநுபவங்களைப் போலவே தான் அவன் உள்ளமும் தன்னைச் சூழ்ந்திருந்த "அக இருள்" என்னும் அரக்கனால் தவித்திருக்க வேண்டும்! "உலகத்திலே வந்து எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளி"யும், "இரு

ளிலே பிரகாசிக்கும்'' ஒளியுமாகிய இயேசுவின் வல்லமை அவன் மேல் விழுந்தவுடன் அவன் இருளிலிருந்து விடுதலை யடைகிறான்! (யோவான் 1:5,9).

அஃதே போன்று இந்த ஜீவ ஒளி தம்மேல் பிரகாசித்து, அசுத்த ஆவிகள் நீங்கியதால், சரீரத்திலிருந்த ''நோய் என்னும் இருள்'' நீங்கிய மக்கள் பலரையும் கூட வேதத்தில் நாம் காணலாம்! இதோ! இரு சான்றுகள்!

''ஓர் ஓய்வுநாளில் இயேசு ஜெப ஆலயத்தில் போதகம் பண்ணிக் கொண்டிருந்தார்.''

அப்பொழுது பதினெட்டு வருஷமாய்ப் பலவீனப்படுத்தும் ஆவியைக் கொண்ட ஒரு ஸ்திரீ அங்கேயிருந்தாள். அவள் எவ்வளவும் நிமிரக் கூடாத கூனியாயிருந்தாள்.

இயேசு அவளைக் கண்டு, தம்மிடத்தில் அழைத்து: ''ஸ்திரீயே, உன் பலவீனத்தினின்று விடுதலையாக்கப்பட்டாய்'' என்று சொல்லி,

அவள்மேல் தமது கைகளை வைத்தார். உடனே அவள் நிமிர்ந்து, தேவனை மகிமைப்படுத்தினாள் (லூக்கா 13:10-13). இது ஒரு சம்பவம்! மற்றொன்று இதோ!

''அவர்கள் புறப்பட்டுப் போகையில் பிசாசு பிடித்த ஊமையான ஒரு மனுஷனை அவரிடத்தில் கொண்டு வந்தார்கள்''.

பிசாசு துரத்தப்பட்ட பின்பு ஊமையன் பேசினான். ஜனங்கள் ஆச்சரியப்பட்டு, ''இஸ்ரவேலில் இப்படி ஒருக்காலும் காணப்படவில்லை'' என்றார்கள் (மத். 9:32,33).

''எவ்வளவும் நிமிரக் கூடாத கூனி'' யை அவ்வாறு கட்டி வைத்திருந்ததும், தன் வாயைத் திறந்து தன் பெற்றோரோடும், மற்றவரோடும் பேசக் கூடாமலும், மற்றவர் சொல்வதைக் கேட்க வழியின்றி அவனுக்குக் காதுகள் கேட்காமலும் செய்தது யார்? ''பலவீனப்படுத்தும் ஆவி'' ''பிசாசு'' என வேதமும் விளக்குகின்றதன்றோ! ஆண்டவராகிய கிறிஸ்துவின் வாழ்க்கையிலே இந்த சம்பவங்கள் நடைபெற்றதால் அசுத்த ஆவிகளும் கூட மானிடரின் சரீரங்களுக்குள் புகுந்து சில சமயங்களில் நோய்களைக் கொண்டு வருகின்றன என்னும்

கூற்றை நிரூபிக்கின்றன அன்றோ! ஆம்! மக்கள் உள்ளத்தில் புகுந்து அன்னார் தம் மன அமைதியையும், தூய்மையையும் கெடுத்து விடும் அசுத்த ஆவிகள் ''தேவனுடைய ஆலயமாம்'' (1 கொரி. 3:16-17). மக்கள் சரீரங்களையும் நோய் எனும் அந்தகாரத்தினால் கெடுக்கின்றன. அவ்வாறாயின் ''அசுத்த ஆவிகள்'' என்பன யாவை? அவற்றின் தோற்றம் எங்கு? உறைவிடம் எது? என்று பல வினாக்கள் நம் உள்ளத்தில் எழுவது இயல்பே! இவை யாவற்றிற்கும் தெளிவாக விடை பகருவதென்பது மிகக் கடினமெனினும், வேதத்திலிருந்து என் சிற்றறிவிற் கேற்பவும் தேவ ஊழியத்தில் கண்ட அனுபவத்திலிருந்தும் சில காரியங்களை எழுத முயல்வேன்!

## பிசாசின் சரிதை!

பிசாசின் தோற்றம் யாரும் அறிய இயலாத அளவிற்கு புராதனமானது. எசேக்கியேல் 28:12-24, இதை அவ்விதம் வருணிக்கிறது. ''கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்றால, நீ விசித்திரமாய்ச் செய்யப்பட்ட முத்திரை மோதிரம்! நீ ஞானத்தால் நிறைந்தவன்! பூரண அழகுள்ளவன்!

''நீ தேவனுடைய தோட்டமாகிய ஏதேனில் இருந்தவன். பத்மராகம், புஷ்பராகம், வைரம், படிகப்பச்சை, கோமேதகம், யஸ்பி, இந்திர நீலம், மரகதம், மாணிக்கம் முதலான சகலவித இரத்தினங்களும், பொன்னும் உன்னை மூடிக் கொண்டிருக்கிறது. நீ சிருஷ்டிக்கப்பட்ட நாளில் உன் மேளவாத்தியங்களும், உன் நாக சுரங்களும், உன்னிடத்தில் ஆயத்தப்பட்டிருந்தன.''

''நீ காப்பாற்றுகிறதற்காக அபிஷேகம் பண்ணப்பட்ட கேரூப். தேவனுடைய பரிசுத்த பர்வதத்தில் உன்னை வைத்தேன். அக்கினி மயமான கற்களின் நடுவே உலாவினாய்.''

''நீ சிருஷ்டிக்கப்பட்ட நாள் துவங்கி உன்னில் அநியாயம் கண்டு பிடிக்கப்பட்டது மட்டும், உன் வழிகளில் குறையற்றிருந்தாய்.''

ஆம்! அவன் தீய செயல்களுக்கென பிறப்பிக்கப்பட்டவனல்ல! எல்லாம்வல்ல இறைவனது சமூகத்தில் எல்லா மகிமையோடும், அவருடைய சன்னிதானத்தில் காணப்படுவதற்காக உருவாக்கப்பட்ட ஓர் ஒப்பற்ற சிருஷ்டி. பூரண அழகுள்ளவன்! ஞானத்தால் நிறைந்தவன்! அந்தோ!

பெருமை யெனும் விஷம் யாரைத் தான் கெடுக்காமல் விட்டது ! நடந்ததென்ன ? வேதம் இதோ விளக்குகிறது. கேண்மின் !

'அதிகாலையின் மகனாகிய விடிவெள்ளியே! நீ வானத்தி லிருந்து விழுந்தாயே ! ஜாதிகளை ஈனப்படுத்தினவனே, நீ தரையிலே விழ வெட்டப்பட்டாயே !''

''நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத் திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன் ; வடபுறங்களிலுள்ள ஆராதனைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன் என்றும்'' நான் மேகங்களுக்கு மேலாக உன் னதங்களில் ஏறுவேன்; உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாயே.''

''ஆனாலும் நீ அகாதமான பாதாளத்திலே தள்ளுண்டு போனாய்'' (ஏசாயா 14:12-15).

ஆம் ! மற்ற சிருஷ்டிகளிலும் தேவன் தனக்குக் கொடுத் திருந்த மேன்மையை நினைத்து நினைத்து அவருக்கு இரவும் பகலும் துதி பாடுவதற்குப் பதிலாக, ''தேவனுடைய நட்சத் திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன்'' என்றான். அல்லது தேவனைவிட உயர்ந்தவனாக அவன் முயற்சித்தான் ! முடிவு ! தன் உயர் பதவியை இழந்தான் ! தேவ பிரசன்னத்திலிருந்து தள்ளப்பட்டான். அவனும் அவ னோடு துரோகம் செய்த தூதர்களும் ''அந்தகாரச் சங்கிலிகளி னாலே கட்டப்பட்டு நியாயத் தீர்ப்புக்கு வைக்கப்பட்டவர்களாக ஒப்புக் கொடுக்கப்பட்டார்கள்'' (II பேதுரு 2:4). அதையே யூதா பின்வருமாறு தன் நிருபத்தில் விவரிக்கிறார். ''தங்க ளுடைய ஆதிமேன்மையைக் காத்துக் கொள்ளாமல், தங்களுக் குரிய வாசஸ்தலத்தை விட்டுவிட்ட தூதர்களையும், மகா நாளின் நியாயத் தீர்ப்புக்கென்று நித்திய சங்கிலிகளினாலே கட்டி, அந்தகாரத்தில் அடைத்து வைத்திருக்கிறார்'' (யூதா 6).

''சேரக்கூடாத ஒளியில் வாசம் பண்ணுகிற'' தேவனோடு (I தீமோ 6:16) சஞ்சரித்து, ''அக்கினி மயமான கற்களின் நடுவே உலாவிக் கொண்டிருந்த'' (எசே 28:14), கேரூப் இப் பொழுது ''அந்தகாரம்'' எனும் ''நித்திய சங்கிலி''யால் கட்டப் பட்டுத் தவிக்கிறான். ''ஒளிக்கும், இருளுக்கும் ஐக்கியமேது''

(II கொரி. 6:14) என்ற தேவ வாக்குக்கேற்ப முற்றிலும் முரண் பட்ட அந்தகாரச் சூழ்நிலையில் பிசாசும் அவன் உடன் தோழ ரான தூதர்களும் தவிக்கின்றனர்.

இந்த பரிதாப வீழ்கைக்குப் பின் வேறொரு ஒப்பற்ற நிகழ்ச்சி நடந்தது. தேவ தூதர்களைப் போன்றே அவர்தம் துதியைச் சொல்லிவர (ஏசாயா 43:21), ''தேவன் தம்முடைய சாயலாக மனுஷனை சிருஷ்டித்தார் அவனைத் தேவ சாயலா கவே சிருஷ்டித்தார்'' (ஆதி. 1:27). மனிதனுடைய ஒப்பற்ற சிருஷ்டிப்பை வேதம் இன்னும் பின்வருமாறு வியந்து பேசு கிறது.

''நீர் அவனைத் தேவ தூதரிலும் சற்று சிறியவனாக்கினீர். மகிமையினாலும், கனத்தினாலும் அவனை முடிசூட்டினீர். உம்மு டைய கரத்தின் கிரியைகளின் மேல் நீர் அவனுக்கு ஆளுகை தந்து சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தி னீர். ஆடு மாடுகளெல்லாவற்றையும், காட்டு மிருகங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும், சமுத்திரத்து மச்சங்களையும், கடல்களில் சஞ்சரிக்கிறவைகளையும், அவனுடைய பாதங்களுக் குக் கீழ்ப்படுத்தினீர்'' (சங் 8:5-8).

இதைக் கண்ணுற்ற, தன் மேன்மையை இழந்து விழுந்து போன கேருபாகிய பிசாசும், அவனுடைய சகாக்களும் மனுஷ வர்க்கத்திற்குள் புகுந்து, அவர்களுக்கு இடர் விளைவித்து, அவர் களையும் தேவனை விட்டுப் பிரிக்க முயற்சிக்கின்றன. அவர்கள் உள்ளத்திற்குள் புகுந்து மன அமைதியைக் கெடுத்து இருளில் இருப்பது போன்ற உணர்வை உண்டாக்குகின்றன! அவர் களது உடலைக்கெடுத்து நோய்களை உண்டாக்கி மனுஷர் தேவனை சபித்து அவரை விட்டுத் தூரமாகும்படி செய்கின்றன!

இவைகளை தவிர வேறுவித பல பொல்லாத ஆவிகளும், இவற்றோடு கூடி மக்களுக்கு இன்னல் விளைவிக்கின்றன. கிறிஸ்துவின் வல்லமையால் அசுத்த ஆவிகளைத் துரத்தி மக் களை விடுவிக்கும் சீரிய இறைத் தொண்டில் ஆண்டவர் பயன் படுத்தும் பக்தர்கள் தம் அனுபவத்திலிருந்து வெளியிடும் கருத்துக்களைத் தான் புனைந்து கீழே தருகிறேன். ''ஒவ்வொன் றிற்கும் ஒவ்வொரு காலமுண்டு. வானத்தின் கீழிருக்கிற ஒவ் வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு சமயமுண்டு. பிறக்க ஒரு காலமுண்டு, இறக்க ஒரு காலமுண்டு'' (பிரசங்கி 3:1,2), என்ற வேத வாக்கியங்களின்படி ஒவ்வொரு மனிதனுக்கும்

உலகில் கட்டாயமாக வாழவேண்டிய காலம் ஒன்று தேவனால் குறிக்கப்பட்டுள்ளது ஆனால் வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களைச் சகிக்க ஒண்ணாது, தம் காலம் முடியுமுன்பே அநேகர் தற்கொலை செய்து தம் சரீரமாகிய வீட்டிலிருந்து தம் ஆன்மாவைப் பிரித்து விடுகின்றனர். அத்தகைய ஆன்மாக்கள், தாம் இறைவன் திருச்சந்நிதி சேருவதற்கென முன்பே தேவனால் குறித்து வைக்கப்பட்ட நாள் வருமட்டும் இப்பூவுலகிலேயே அலைந்து திரிகின்றன. இளைப்பாறுதலின்றித் தவிக்கின்றன. ஒரு மனிதனின் வாழ்வு எல்லை 80 வயது என்பது தேவ தீர்மானம் என வைத்துக் கொள்ளுவோம். அவன் தன் 30ஆம் வயதில் தற்கொலை செய்து கொள்ளுவானாயின் எஞ்சியுள்ள 50 வருடங்களில் ''பொல்லாத ஆவியாக'' இளைப்பாறுதலின்றி அலைந்து திரிகிறான். தங்க ஒரு சரீரத்தைத் தேடுகிறான். எந்த உள்ளம் கிறிஸ்து இன்றி காலியாக உள்ளதோ அதற்குள் புகுந்து விடுகிறான். அந்த உள்ளத்தையும், உடலையும் அந்த ஆவி இன்னலுக்கு உட்படுத்துகிறது. உதாரணமாக வயிற்று வலியால் துடித்து, அதைத் தாங்கமுடியாமல் தற்கொலை செய்துகொள்ளும் ஆவி, ஒரு மனிதனுக்குள் புகுந்தால் அவனும் அதே நோயால் துடிக்கிறான்; தவிக்கிறான். எத்துணை தலைசிறந்த வைத்தியர்கள் அவனைச் சோதித்துப் பார்த்தாலும், மெய்க் காரணத்தை சரீரத்தில் காணவே முடியாது! ''ஐயா! எங்களுக்குத் தெரிந்த வரை இந்த சரீரத்தில் நோய்க்குக் காரணம் ஒன்றுமில்லை. உங்கள் மனம் தான் உங்கள் நோய்க்குக் காரணம்! நாங்கள் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. இனி நீங்கள் இறைவனை வேண்டிக் கொள்ளுங்கள்'' என்றே தெய்வ பக்தியுள்ள வைத்தியர்களும் கூறி விடுகின்றனர்.

இது மட்டுமல்ல! எகிப்தின் மந்திரவாதிகள், பிசாசுகளின் வல்லமையால் அற்புதங்கள் செய்தார்கள் என்று வாசிக்கிறோம் (யாத். 7:11,22;8:7). இந்த அற்புதங்கள் தீமைக்கென்றே பயன்பட்டன. அதே போன்று இந்த அசுத்த ஆவிகளைத் தம் வசப்படுத்தி அவற்றைக் கொண்டு மக்களுக்குத் தீமை விளைவிக்கும் கொடிய மக்களும் இவ்வுலகில் உண்டு. இதை வேதம் ''பில்லி சூனியம் என்னும் கொடிய பாவம்'' என அழைக்கிறது (I சாமு. 15:23; கலா. 5:20). அந்தோ! அசுத்த ஆவியின் உபத்திரவத்தாலும், பில்லி சூனியத்தின் பிடிகளில் சிக்குவதாலும் விதவிதமான பிணியடைந்து மாண்டவர் எண்ணிக்கை ஏராளம்! சீர்குலைந்து அழிந்த குடும்பங்கள் எத்தனை! எத்தனை!! இவ்விதமாய் தவிப்போரிடமிருந்து தின

மும் எனக்கு வரும் கடிதங்கள் உள்ளத்தை உருக்குவதாய்
உள்ளன!

என்னோடு ஆண்டவருடைய ஊழியத்தில் அதிகம் ஒத்து
ழைக்கும் சிறந்த தேவ பக்தியுள்ள மருத்துவ நண்பர் ஒருவ
ரிடம் இது விஷயமாக தெளிவு நாடி வினவினேன். அவரும்
இதற்கு ஆதாரமாகப் பல சம்பவங்களைக் கூறினார். ஒன்றை
மட்டும் கூறுவேன். நல்ல திடகாத்திரமுள்ள புருஷர் ஒருவர்
ஒரு நாள் திடீரென்று தன் கால்கள் பலவீனமாகிக் கொண்டே
போவதை உணர்ந்தாராம்! மருத்துவர்கள் அவரைப் பரிசோ
தித்தனர். இரத்த ஓட்டமோ, தசைகளோ, நரம்புகளோ
செம்மையாகவே உள்ளதெனக் கண்டனர். நோயின் காரண
மின்னதென அறியவே முடியவில்லை. ஆனால் அவர் கால்கள்
மெலித்துகொண்டே போயிற்று நம்பக்கூடாத அளவிற்கு
குறுகி வாடின. எத்தனையோ சிகிச்சை செய்தும் அவர் அப்
பரிதாப நிலையிலேயே மாண்டார். என் நண்பர் இவ்வாறு
கூறினார். "இது உண்மையிலேயே அசுத்த ஆவிகளின் வேலை
தான். இது எங்கள் யாவருக்கும் தெரியும். ஆனால் அதை
மருத்துவர்களால் பகிரங்கமாக ஒப்புக்கொள்ள முடியாது.
காரணம் மருத்துவ சாஸ்திரத்தில் 'பிசாசுகள்' என்ற பதமே
கிடையாது."

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் நாம் கண்ட கூனி
யின் கதை, மேற் சொன்ன சம்பவத்திற்கு ஒத்திருக்கிற
தன்றோ!

ஆந்திராவில், பாபட்லா என்ற இடத்தில் ஊழியம் செய்து
கொண்டிருக்கும்பொழுது ஆண்டவரை நேசிக்கும் தம்பதிகளைக்
கண்டேன். அன்னார் முகம் வாடிக் காணப்பட்டது. காரணம்
பின்வருமாறு: அவ்வம்மையார் கருவுறும் பொழுதெல்லாம்,
சரியாக 8 மாத கர்ப்பிணியாக இருக்கும்பொழுது ஒரு பாம்பு
கனவில் தோன்றுமாம். உடனே கருச்சிதைவு ஏற்படுமாம்.
இப்படி கர்ப்பப் பையிலேயே மாண்ட குழந்தைகள் ஏராளம்.
அவர்களுக்கு ஆறுதலாக கீழ்க்கண்ட வசனங்களை அன்னாரது
நினைவுக்கு கொண்டு வந்தேன்.

"இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்
தின் கனி அவரால் கிடைக்கும் பலன்" (சங். 127:4).

"உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக்
கன்றுகளைப் போல் இருப்பார்கள்" (சங். 128:3).

கண்ணீரோடு அவர்களுடன் ஜெபித்தேன். தேவ ஆவியானவர் அவ்வீட்டில், அவர்கள் இருவர் மேலும் இறங்கினார். கொடிய ஆவியின் வல்லமையை கிருபையாக அழித்தார். உற்பவகாலத் திட்டத்தில் ஒரு பெண் குழந்தையை அவ்வம்மையார் பெற்றெடுத்தார். இதைப்போல இறைவன் இயேசுவின் மகிமைக்கெனப் பல உதாரணங்களை எழுதலாம்! இடம் போதாது!

இப்பொழுது நம் மனதில் எழும் ஒரு கேள்வி! அசுத்த ஆவிகளின் வல்லமைகளிலிருந்து விடுபடுவதெவ்வாறு? அவற்றின் கொடிய பிடிக்கு விலக்கி நம்மைக் காப்பதெவ்வாறு? சற்றே வேதத்தை ஆராய்வோம்!

1. இயேசுவின் பிரசன்னம்!

இந்த அத்தியாயத்தின் துவக்கத்தில் மாற்கு 1:21-28இல் அடங்கியுள்ள வேத பாகத்தில் அசுத்த ஆவி பிடித்த மனுஷன் ஒருவன் தான் இருந்த ஜெப ஆலயத்தில் இயேசு கிறிஸ்து நுழைந்தவுடன் தன்னையுமறியாமல் கூச்சலிட்டதைக் காண்கிறோம். தேவ குமாரனின் பிரசன்னம் அவனுக்கு இருந்த அசுத்த ஆவியைத் திகிலடையச் செய்தது. அவரை நோக்கி இரக்கத்திற்காக கெஞ்சும்படி செய்தது. "பிசாசுகளும் விசுவாசித்து நடுங்குகின்றன" (யாக். 2:19) என்ற வாக்குப்படி அந்த ஆவியை நடுங்க வைத்தது. சுருங்கக் கூறின் இயேசு சென்ற இடம் எல்லாம் "பிசாசுகளும்: நீர் தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று சத்தமிட்டு, அநேகரை விட்டுப் புறப்பட்டது. அவரை கிறிஸ்து என்று பிசாசுகள் அறிந்திருக்கிறபடியால் அவர் அவர்களைப் பேசவொட்டாமல் அதட்டினார்" (லூக். 4:41). அப்படியானால் கிறிஸ்து உம்மோடு இருந்தால் பிசாசுகள் உம்மைத் தொடுவதில்லை என்பது விளங்குகின்றதன்றோ!

கிறிஸ்துவை நம்மோடு வாசம் செய்ய வைக்க முடியுமா? அவரே வழி சொல்லட்டும்!

"ஒருவன் என்னில் அன்பாயிருந்தால், அவன் என் வசனத்தைக் கைக்கொள்ளுவான். அவனில் என் பிதா அன்பாயிருப்பார். நாங்கள் அவனிடத்தில் வந்து அவனோடே வாசம் பண்ணுவோம்" (யோவான் 14:23).

ஆம்! தேவனுடைய கட்டளைகளையும், கற்பனைகளையும் கைக்கொள்ள ஜாக்கிரதையாயிருக்கும் எவருடனும் கர்த்தர் வந்து வாசம் பண்ணுவார். அவனை அசுத்த ஆவிகள் தொடு வதேயில்லை "தேவனால் பிறந்த எவனும் பாவஞ் செய்யா னென்று அறிந்திருக்கிறோம். தேவனால் பிறந்தவன் தன்னைக் காக்கிறான். பொல்லாங்கன் அவனைத் தொடான்" (I யோவான் 5:18) என வேதமும் ஆதரவு தருகின்றதன்றோ! நண்பா! நீ அசுத்த ஆவிகள் தொல்லையால், பில்லி சூனியத் தின் கொடூர பிடியினால் தவிக்கிறாயோ? இப்பொழுதே நீ அவர் வார்த்தைகளைக் கவனமாய்ப் பிடித்து, அவர் கட்டளைகளுக்கும், கற்பனைகளுக்கும் கீழ்ப்படிந்து நடக்கத் தீர்மானிப்பாயானால்- நடக்க ஆரம்பிப்பாயானால்-கிறிஸ்துவின் பிரசன்னம் உன்னைச் சூழ்ந்து கொள்ளும். அசுத்த ஆவிகளின் வல்லமை அவர் பிரசன்னத்தைக் கண்டு மிரண்டோடும்!

2. தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவராலும், வல்லமையி னாலும் நிறைந்திருத்தல் !

"நசரேயனாகிய இயேசுவைத் தேவன் பரிசுத்த ஆவியினா லும், வல்லமையினாலும் அபிஷேகம் பண்ணினார். தேவன் அவருடனேகூட இருந்தபடியினாலே அவர் நன்மை செய்கிற வராயும், பிசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவரையும் குண மாக்குகிறவராயும் சுற்றித் திரிந்தார்" (அப். 10:38).

இயேசு தேவ குமாரன்!

"அவர் அதரிசனமான தேவனுடைய தற்சுரூபமும், சர்வ சிருஷ்டிக்கும் முந்தின பேறுமானவர்."

ஏனென்றால் அவருக்குள் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது. பரலோகத்திலுள்ளவைகளும், பூலோகத்திலுள்ளவைகளுமா கிய காணப்படுகிறவைகளும், காணப்படாதவைகளுமான சகல வஸ்துக்களும், சிங்காசனங்களானாலும், கர்த்தத்துவங்களானா லும், துரைத்தனங்களானாலும், அதிகாரங்களானாலும், சகல மும் அவரைக் கொண்டும், அவருக்கென்றும் சிருஷ்டிக்கப்பட் டது அவர் எல்லாவற்றிற்கும் முந்தினவர். எல்லாம் அவருக் குள் நிலை நிற்கிறது" (கொலொ. 1:15-17).

"பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும் படிக்கே தேவனு டைய குமாரன் வெளிப்பட்டார்" (I யோவான் 3:8) என்று

அவரைக் குறித்து வேதம் கூறுகிறது. பிசாசின் சோதனை களை எதிர்க்க அவர் ''பரிசுத்த ஆவியினாலே நிறைந்தவராய்'' சென்றார் (லூக்கா 4:1). அவர் பேச்சில், செய்கையிலிருந்த வல்லமைக்குக் காரணத்தை வேதம் பின்வருமாறு வருணிக் கிறது. ''தேவனால் அனுப்பப்பட்டவர் தேவனுடைய வார்த்தை களைப் பேசுகிறார் தேவன் அவருக்குத் தமது ஆவியை அள வில்லாமல் கொடுத்திருக்கிறார்'' (யோவான் 3:34). எனவே அவர் பிசாசைக் குறித்து பேசும்பொழுது ''இந்த உலகத்தின் அதிபதி வருகிறான். அவனுக்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை'' (யோவான் 14:30) எனத் தைரியமாய்ப் பேசினார்.

தேவனுடைய வார்த்தைகளுக்குக் கீழ்ப்படியும்பொழுது கிறிஸ்துவின் பிரசன்னம் நம்மைச் சூழ்கிறது. ஆனால் தேற்றர வாளனாகிய பரிசுத்த ஆவியானவரால் நாம் நிரப்பப்படும் பொழுதோ கிறிஸ்து நமக்குள் வருகிறார். சகல வல்லமை யோடும் நம்மில் வாசம் பண்ணுகிறார். இந்த அனுபவத்தையே பரி. பவுல் ''இதினிமித்தம் நான் பரலோகத்திலும், பூலோ கத்திலுமுள்ள முழுக் குடும்பத்துக்கும் நாமகாரணராகிய நம்மு டைய கர்த்தராயிருக்கிற இயேசு கிறிஸ்துவினுடைய பிதாவை நோக்கி முழங்கால்படியிட்டு நீங்கள் அவருடைய ஆவியினாலே உள்ளான மனுஷனில் வல்லமையாய்ப் பலப்படவும், விசுவாசத் தினாலே கிறிஸ்து உங்கள் இருதயங்களில் வாசமாயிருக்கவும், நீங்கள் அன்பிலே வேரூன்றி, நிலை பெற்றவர்களாகி'' (எபே. 3:14-17) என்ற வார்த்தைகள் மூலம் விளக்குகிறார்.

பரி. பவுலைக் குறித்து வேதம் பேசும்பொழுது அவரைக் கண்டும் பிசாசுகள் நடுங்கின என வாசிக்கிறோம்! குறி சொல்ல ஏவுகிற ஆவியைக் கொண்டிருந்த ஒரு பெண் பவுலைக் கண்ட பொழுது அவரையும் கூட இருந்த மற்ற சீடர்களையும் சுட்டிக் காட்டி ''இந்த மனுஷர் உன்னதமான தேவனுடைய ஊழியக் காரர். இரட்சிப்பின் வழியை நமக்கு அறிவிக்கிறவர்கள் என்று சத்தமிட்டாள்'' (அப். 16:17). மட்டுமல்ல! எபேசு என்னும் நகரில் அவர் இருந்தபொழுது ''பவுலின் கைகளினாலே தேவன் விசேஷித்த அற்புதங்களைச் செய்தருளினார்''.

''அவருடைய சரீரத்திலிருந்து உறுமால்களையும் கச்சை களையும் கொண்டு வந்து வியாதிக்காரர்மேல் போட, வியாதிகள் அவர்களை விட்டு நீங்கிப்போயின. பொல்லாத ஆவிகளும் அவர்களை விட்டுப் புறப்பட்டன'' (அப். 19:11-12). அசுத்த

ஆவிகள் "இயேசுவை அறிவேன், பவுலையும் அறிவேன்" (அப். 19:15) என அவனைக் குறித்து பலத்த சாட்சியும் பகர்ந் தன. இயேசு தேவ குமாரன்! அவரைக் கண்டு பிசாசுகள் நடுங்கியதில் வியப்பில்லை! ஆனால் பவுல் ஒரு மனிதன்! அவர் பெயரைச் சொன்னாலேயே பிசாசு நடுங்கியதில் வியப்பு உள்ள தன்றோ! காரணமென்ன? நண்பரே! பவுலே காரியத்தைச் சொல்லட்டும்! "இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்" (கலா. 2:20). ஆம்! இயேசு உயிரோடு அவருக்குள் வசித்ததினாலேயே பிசாசுகள் அவரையும் கண்டு அதே விதமாக நடுங்கின!

கர்த்தரால் உபயோகப்படுத்தப்படும் ஒரு சகோதரனை அறிவேன். அவர் பல வருடங்களாக "சுவாமி! நான் வேதத் தில் சொல்லப்பட்டிருக்கிற பக்தர்களைப் போல உம்மோடு நெருங்கி வாழவேண்டும், பேசவேண்டும், பழக வேண்டும்" எனக் கண்ணீரோடு ஜெபித்தார். ஒருநாள் வேதத்தை வாசித்துக் கொண்டிருக்கும் பொழுது மேலே குறிப்பிட்ட அப். 10:38 என்ற வசனம் அவர் மனதைக் கவர்ந்தது. எனவே அவர் மேற்சொல்லிய விண்ணப்பத்தோடு கூட "சுவாமி! என்னையும் உம்முடைய பரிசுத்த ஆவியானவராலும், வல்லமையினாலும் நிரப்பும்" என்று கண்ணீரோடு ஜெபித்து வந்தார். ஒருநாள் தன் வீட்டில் தன் பெற்றோரோடு குடும்ப ஜெபம் செய்து கொண்டிருக்கும் பொழுது கர்த்தர் அவருக்கு மனமிரங்கினார். தம்முடைய மகத்துவமான பரிசுத்த ஆவியான வரால் அவரை நிறைத்தார். விவரிக்க முடியாத ஒரு மகிழ்ச்சி அவர் உள்ளத்தை நிரப்பிற்று. உலகமெல்லாம் ஒரே குடும்ப மாகக் கருதி நேசிக்கும் ஒரு தெய்வீக அன்பு இறைவனிட மிருந்து புறப்பட்டு அவரை நிரப்பியது. இந்த உயரிய ஆன்மீக அனுபவங்களுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் அவருடைய ஆன்மீகக் கண்கள் திறக்கப்பட்டன. தம் கண்களுக்கெதிரே உயிர்த்தெழுந்த தேவ குமாரனாகிய இயேசு கிறிஸ்துவை முக முகமாய் மூன்று மணி நேரம் கண்டு தரிசித்தார்! (அப். 22:17). அவர் வாழ்க்கையில் கிறிஸ்துவின் அன்பும், வல்லமையும் நிறைந்து வழிய ஆரம்பித்தது!

இந்த அனுபவம் "கர்த்தரே ஆவியானவர்" (2 கொரி. 3:17) என்ற சத்தியத்தை விளக்குகிறதன்றோ! ஆம்! நீ தேவ னுடைய ஆவியானவரால் நிரப்பப்பட்டால் கிறிஸ்துவின் பிர சன்னம் உனக்குள் இறங்கி என்றும் தங்கும். இவ்வித

வாழ்க்கையில் அசுத்த ஆவிகள் நுழைவது எங்ஙனம்! எனவே தான் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவும் "பொல்லாதவர் களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது பரம பிதாவானவர் தம்மிடத்தில் வேண்டிக் கொள்ளுகிறவர்களுக்குப் பரிசுத்த ஆவியைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா!" (லூக்கா 11:13) என மொழிந்தார். தம்மை அணுகி தம் நாமத்தினாலே வேண்டிக் கொள்ளும் யாவருக்கும் தம் ஆவியை அவர் அருளுவது மிகத் திட்டமென்று இதனால் புலனாகிறதன்றோ! நீர் எந்தக் கிறிஸ்தவ சபையைச் சேர்ந்தவராயிருந்தாலும், ஏன், எந்த மதத்தைச் சேர்ந்தவராயிருப்பினும்கூட "கேட்கிறவன் எவனும் பெற்றுக் கொள்கிறான்" (லூக். 11:10) என்ற இனிய அன்பர் வாக்கின்படி நீர் விரும்பி ஆண்டவரிடம் கேட்டால் அவர் தம் தூய ஆவியைப் பெறுவது திண்ணம். "சுவாமி! என்னையும் உம் வாக்குப்படி உம்முடைய பரிசுத்த ஆவியினால் நிரப்பும்" என்று கண்ணீரோடு நீர் பிரார்த்திக்க மாட்டீரா? அவர் உமக்குள் வந்தால் நீர் என்றும் அசுத்த ஆவிகளைக் கண்டு பயப்பட வேண்டிய அவசியமே உமக்கு இல்லை! கர்த்தர் தாமே நம் அனைவரையும் தம்முடைய பரிசுத்த ஆவியானவராலும் வல்லமையினாலும், பிரசன்னத்தினாலும் நிரப்பிக் காப்பாராக!





“ இயேசு அழைக்கிருர் ” கூட்டம் ! - மதுரை தமுக்கம் மைதானம் (மாதர் பகுதி மட்டும் !)



“ இயேசு அழைக்கிருர் ” கூட்டங்கள் ! — தூத்துக்குடி.



# 4. தேவ கோபம்!

"தேவன் நீதியுள்ள நியாயாதிபதி. அவர் நாள்தோறும் பாவியின்மேல் சினங் கொள்ளுகிற தேவன். அவன் மனந் திரும்பாவிட்டால் அவர் தம்முடைய பட்டயத்தைக் கருக் காக்குவார், அவர் தம்முடைய வில்லை நாணேற்றி, அதை ஆயத்தப்படுத்துகிறார்" (சங். 7:11-12).

தேவன் அன்புள்ளவர்! மனந்திரும்புகிறவர்கள்மேல் அதிக இரக்கமுள்ளவராயிருக்கிறார் என்பது உண்மைதான்! அதே சமயத்தில் மனந்திரும்பாது பாவத்தில் மனதார மூழ்குகிறவர்கள்மேல்—பாவமென்று திட்டமாகத் தெரிந்தும்—தாம் செய்யும் அப்பாவங்களைத் தேவன் விரும்பாதவர் என அறிந்திருந்தும்—துணிந்து அவைகளைச் செய்கிறவர்கள்மேல்—அவர் சினங் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிறது. அது தான் தேவ நீதி! இந்தக் கருத்தைத்தான் கீழ்க்கண்ட வேத வசனங்கள் விளக்குகின்றன!

"ஆயிரம் தலைமுறைகளுக்கு இரக்கத்தைக் காக்கிறவர், அக்கிரமத்தையும் மீறுதலையும் பாவத்தையும் மன்னிக்கிறவர், குற்றவாளியை குற்றமற்றவனாக விடாதவர்" (யாத். 34:7).

"அப்படிப்பட்டவன் இந்த ஆணையுறுதியின் வார்த்தைகளைக் கேட்டும், தாகத்தினிமித்தம் வெறிக்கக் குடித்து, மன இஷ்டப்படி நடந்தாலும் எனக்குச் சுகமுண்டாயிருக்கும் என்று தன் உள்ளத்தில் தேற்றிக் கொண்டால், கர்த்தர் அவனை மன்னிக்கச் சித்தமாயிரார்" (உபா. 28:19).

"சாராயத்தை நாடி அதிகாலமே எழுந்து, மதுபானம் தங்களைச் சூடாக்கும்படி தரித்திருந்து, இருட்டிப்போகுமளவும் குடித்துக் கொண்டேயிருக்கிறவர்களுக்கு ஐயோ! அவர்கள் சுரமண்டலத்தையும், தம்புருவையும், மேளத்தையும், நாகசுரத்தையும் மதுபானத்தையும் வைத்து விருந்து கொண்டாடுகிறார்கள், ஆனாலும் கர்த்தரின் கிரியையை நோக்குகிறதுமில்லை, அவர் கரத்தின் செய்கையைச் சிந்திக்கிறதுமில்லை" (ஏசாயா 5:11,12).

''அதினிமித்தம் பாதாளம் தன்னை விரிவாக்கி, தன் வாயை ஆவென்று மட்டில்லாமல் திறந்தது; அவர்கள் மகிமையும், அவர்கள் திரள் கூட்டமும், அவர்கள் ஆடம்பரமும், அவர்களில் களி கூறுகிறவர்களும் அதற்குள் இறங்கிப் போவார்கள். சேனைகளின் கர்த்தர் நியாயத் தீர்ப்பினால் உயர்ந்து, பரிசுத்தமுள்ள தேவன் நீதியினால் பரிசுத்தராய் விளங்குவார்'' (ஏசா 5:14, 16).

மேற்கண்ட வசனங்கள் பாவத்தில் மனதார வாழும் தனிப்பட்டவர்களுடைய வாழ்க்கையில் வரும் தேவ தண்டனையைக் குறித்துப் பேசுகின்றன. அதே போன்று, ஒரு தேசத்தின் குடிகள் யாவரும் பாவத்தைத் தண்ணீர்போல் பருக ஆரம்பிக்கும்பொழுது அந்தத் தேசம் பாவ பாரத்தை சுமக்க இயலாது தவிக்கிறது. அந்தத் தேசத்தின் அக்கிரமம் பெருகி வான பரியந்தம் எட்டுகிறது. அந்த அக்கிரமங்களே தேவ கோபாக்கினையை அந்தத் தேசத்தின்மேல் கொண்டு வருகிறது. பக்தனாகிய நோவாவின் நாட்களில் தேவன் பூமியை ஜலப்பிரவாகத்தால் அழிக்கக் காரணம் ''மனுஷனுடைய அக்கிரமம் பூமியில் பெருகினதே'' (ஆதி. 6:5). அதைக் கீழ்க்கண்ட வசனங்கள் மிகவும் தெளிவாக விளக்குகின்றன.

''பூமியானது தேவனுக்கு முன்பாகச் சீர்கெட்டதாயிருந்தது. பூமி கொடுமையினால் நிறைந்திருந்தது. தேவன் பூமியைப் பார்த்தார்; இதோ அது சீர்கெட்டதாயிருந்தது; மாம்சமான யாவரும் பூமியின்மேல் தங்கள் வழியை கெடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது தேவன் நோவாவை நோக்கி மாம்சமான யாவரின் முடிவும் எனக்கு முன்பாக வந்தது; அவர்களாலே பூமி கொடுமையினால் நிறைந்தது. நான் அவர்களைப் பூமியோடுங்கூட அழித்துப் போடுவேன்'' என்றார். (ஆதி. 6:11-13).

புராதன நகரமாகிய சோதோம் கொமோராவையும், அதின் குடிகளையும் அக்கினியால் அழிக்குமுன், கர்த்தர் மனவேதனையோடு கீழ்க்கண்டவாறு கூறுவதை நாம் ஆதியாகமம் 18:20, 21 இல் வாசிக்கலாம்.

''பின்பு கர்த்தர் சோதோம் கொமோராவின் கூக்குரல் பெரிதாயிருப்பதினாலும், அவைகளின் பாவம் மிகவும் கொடியதாயிருப்பதினாலும், நான் இறங்கிப்போய், என்னி

டத்தில் வந்து எட்டின அதின் கூக்குரலின்படியே அவர்
கள் செய்திருக்கிறார்களோ இல்லையோ என்று பார்த்து
அறிவேன் என்றார்.''

மேற்சொல்லிய இரு நகரங்களின் அழிவுக்குக் காரணம் அவற்றின் குடிகளின் அக்கிரமமே எனப் பேதுருவும் பின்வருமாறு உரைத்தாரன்றோ!

''பூர்வ உலகத்தையும் தப்பவிடாமல் நீதியைப் பிரசங்கித்த வனாகிய நோவா முதலான எட்டுப் பேரைக் காப்பாற்றி அவபக்தியுள்ளவர்கள் நிறைந்த உலகத்தின்மேல் ஜலப் பிரளயத்தை வரப்பண்ணி, சோதோம் கொமோரா என்னும் பட்டணங்களையும் சாம்பலாக்கிக் கவிழ்த்துப்போட்டு, ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, பிற்காலத்திலே அவபக்தியாய் நடப்பவர்களுக்கு அவைகளைத் திருஷ்டாந்தமாக வைத்தார்'' (II பேதுரு 2:5,6).

யோனா தீர்க்கதரிசியை அழைத்து மகா நகரமாகிய நினிவேக்கு விரோதமாக அனுப்பும்பொழுது, இதே போன்று அவர்கள் அக்கிரமமே தேவ கோபாக்கினையை வரவழைக்கிறது என தேவன் தாமே:

''நீ எழுந்து மகா நகரமாகிய நினிவேக்குப் போய், அதற்கு விரோதமாகப் பிரசங்கி; அவர்களுடைய அக்கிரமம் என் சமுகத்தை வந்து எட்டினது'' (யோனா 1:2).

என்ற வார்த்தைகள் மூலம் தெளிவுபடுத்தினானன்றோ!

பாலும் தேனும் ஓடுகிற கானான் தேசத்தைத் தேவன் ஆபிரகாமுக்குக் கொடுப்பேன் என வாக்குத்தத்தம் பண்ணினார். அதோடுகூட அதில் குடியிருந்த எமோரியர் மற்றும் ஜனங்களை அழிக்க ஒரு காலம் உண்டு என்றும் கூறினார். உடனே அழிக்காததற்குக் காரணம் ''எமோரியருடைய அக்கிரமம் இன்னும் நிறைவாகவில்லை'' என்பதே (ஆதி. 15:16). அவர்களுடைய அக்கிரமம் அவ்விதமாகவே நிறைவேறிற்றென்றும், இஸ்ரவேலர் கைகளால் அவர்கள் தம் அக்கிரமங்களுக்கேற்ற தேவ கோபாக்கினையை அடைந்து அழிந்தார்கள் என்றும் கீழ்க்கண்ட தேவ வசனங்கள் விளக்குகின்றன.

''எஸ்போனின் ராஜாவாகிய சீகோன் என்னும் எமோரியனையும் அவன் தேசத்தையும் உன் கையிலே ஒப்புக்கொடுத்தேன்'' (உபா. 2:24).

''உன் தேவனாகிய கர்த்தர் உனக்கு முன்பாக கடந்து போகிறவர் என்பதை இன்று அறியக்கடவாய்; அவர் பட்சிக்கிற அக்கினியைப்போல அவர்களை அழிப்பார்; அவர்களை உனக்கு முன்பாக விழப்பண்ணுவார்; இவ்வித மாய்க் கர்த்தர் உனக்குச் சொன்னபடியே, நீ அவர்களைச் சீக்கிரமாய்த் துரத்தி, அவர்களை அழிப்பாய் உன் தேவனாகிய கர்த்தர் அவர்களை உனக்கு முன்பாகத் துரத்துகையில், நீ உன் இருதயத்திலே என் நீதியினிமித்தம் இந்த தேசத்தைச் சுதந்தரித்துக் கொள்ளும்படி கர்த்தர் என்னை அழைத்து வந்தார் என்று சொல்லாயாக. அந்த ஜாதிகளுடைய ஆகாமியத்தினிமித்தமே கர்த்தர் அவர்களை உனக்கு முன்பாகத் துரத்திவிடுகிறார்'' (உபா. 9:3,4).

''இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவன் எவனும் கர்த்தருக்கு அருவருப்பானவன்; இப்படிப்பட்ட அருவருப்புகளின் நிமித்தம் உன் தேவனாகிய கர்த்தர் அவர்களை உன் முன்னின்று துரத்திவிடுகிறார்'' (உபா. 18:12).

தம் அக்கிரமங்களால், அந்தக் குடிகள் பகைவர் கை பட்டு தம் தேசத்திலிருந்து துரத்தப்பட்டது மட்டுமல்ல! **தேசமே அவர்கள் அக்கிரமங்கள் நிமித்தம் அவர்களைக் கக்கிப் போட்டது** எனவும் வேதம் கூறுகிறது!

''இவைகளில் ஒன்றிலும் உங்களைத் தீட்டுப்படுத்தாதிருங்கள், நான் உங்கள் முன்னின்று துரத்திவிடுகிற ஜாதிகள். இவைகளெல்லாவற்றிலும் தங்களைத் தீட்டுப்படுத்தியிருக்கிறார்கள். தேசமும் தீட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த அருவருப்புகளையெல்லாம் உங்களுக்கு முன் இருந்த அந்த தேசத்தின் மனிதர் செய்ததினாலே தேசம் தீட்டாயிற்று'' (லேவி. 18:24,26).

''ஆகையால் நீங்கள் குடியிருப்பதற்காக நான் உங்களைக் கொண்டுபோகிற தேசம் உங்களைக் **கக்கிப் போடாதபடிக்கு** நீங்கள் என் கட்டளைகள் யாவையும், என்னுடைய நியாயங்கள் யாவையும் கைக்கொண்டு நடவுங்கள். நான் உங்களுக்கு முன்பாகத் துரத்திவிடுகிற ஜனத்தினுடைய வழிபாடுகளில் நடவாதிருங்கள்; அவர்கள் இப்படிப்பட்ட காரியங்களையெல்லாம் செய்தபடியால்தான் அவர்களை அரோசித்தேன்'' (லேவி. 20:22,23).

''இஸ்ரவேல் புத்திரரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்; தேசத்துக் குடிகளோடே கர்த்தருக்கு வழக்கு

இருக்கிறது ; அதேனென்றால் தேசத்திலே உண்மையும் இல்லை, இரக்கமும் இல்லை; தேவனைப் பற்றிய அறிவும் இல்லை. பொய்யாணையிட்டு, பொய் சொல்லி, கொலை செய்து, திருடி, விபச்சாரம் பண்ணி, மிஞ்சி மிஞ்சிப் போகிறார்கள் ; இரத்த பழிகளோடே இரத்தப் பழிகள் சேருகிறது. இதினிமித்தம் தேசம் புலம்பும்; அதில் குடியிருக்கிற அனைவரோடுங்கூட மிருக ஜீவன்களும், ஆகாயத்துப் பறவைகளும் தொய்ந்து போகும் ; கடலின் மச்சங்களும் வாரிக் கொள்ளப்படும்'' (ஓசியா. 4:1-3).

மேற்கண்ட திருஷ்டாந்தங்கள்மூலம் அக்கிரமத்தில் வாழும் குடிகள் நிமித்தம் தேசங்கள்மேல் தேவ கோபாக்கினை இறங்குகிறது என விளங்கிக் கொள்ளலாம்! ஆம்! சாலோமோன் ஞானி கூறினது போல ''பாவமோ எந்த ஜனத்துக்கும் இகழ்ச்சி'' (நீதி. 14:34). ஜலப்பிரளயம், அக்கினி, யுத்தங்கள் இவை மூலம் தேவனுக்கு விரோதமான பாவங்களைச் செய்த தேசங்களைத் தேவன் தம் நீதியின்படி அழித்தார் எனக் காண்கிறோம். தேவ கோபம் இம்முறைகளால் மட்டுமல்ல, வேறு விதங்களிலும் அக்கிரமத்தில் வாழும் மக்கள் மேல் வரும் எனக் கீழ்க்கண்டவாறு தேவன் தாமே கூறுகிறார்.

''என்னை விட்டு விலகி நீ செய்து வருகிற உன் துர்க்கிரியைகளினிமித்தம் சீக்கிரத்தில் கெட்டுப்போய் அழியுமட்டும், நீ கையிட்டுச் செய்கிறதெல்லாவற்றிலும் கர்த்தர் உனக்குச் சாபத்தையும், சஞ்சலத்தையும், கேட்டையும், வரப்பண்ணுவார். நீ சுதந்தரிக்கும் தேசத்தில் கர்த்தர் உன்னை நிர்மூலமாக்குமட்டும் கொள்ளை நோய் உன்னைப் பிடித்துக் கொள்ளப் பண்ணுவார். கர்த்தர் உன்னை ஈளையினாலும், காய்ச்சலினாலும், உஷ்ணத்தினாலும், எரிபந்தத்தினாலும், வறட்சியினாலும், கருக்காயினாலும், விஷப் பனியினாலும் வாதிப்பார் ; நீ அழியுமட்டும் இவைகள் உன்னைப் பின் தொடரும்'' (உபா. 28:20-22).

''நீ குணமாகாதபடி கர்த்தர் உன்னை எகிப்தின் எரிபந்தமான பருக்களினாலும், மூல வியாதியினாலும், சொறியினாலும், சிரங்கினாலும் வாதிப்பார். கர்த்தர் உன்னைப் புத்தி மயக்கத்தினாலும். குருட்டாட்டத்திலும், மனத் திகைப்பினாலும் வாதிப்பார்'' (உபா. 28:27, 28).

''உன் உள்ளங்கால் தொடங்கி உன் உச்சந்தலை மட்டும் குணமாகாதபடிக்கு, கர்த்தர் உன்னை முழங்கால்களிலும்

தொண்டைகளிலும் கொடிய எரிபந்த பருக்களினுலே வாதிப்பார்''
(உபா. 28:35).

இவ்வார்த்தைகளைக் கவனமாக உற்று நோக்குங்கால் கொள்ளை நோயும் மற்ற நோய்களுங்கூட தேவ தண்டனையாகவே அக்கிரமத்தில் உழலும் தேசங்கள்மேல் வருகின்றன என எளிதில் அறியலாகுமன்ரே!

ஜங்களுடைய பாவத்தினிமித்தமாகவே வியாதியும், கொள்ளை நோய்களும் தேசத்தின்மேல் வருகின்றன என சாலமோன் ஞானியும் பின்வருமாறு இவைகளை நோக்கி அவர் ஏறெடுத்த ஒரு முக்கிய ஜெபத்தில் கூறினுர்.

''அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பாவஞ் செய்ததினுல் ..........தேசத்திலே பஞ்சம் உண்டாகிற போதும், கொள்ளை நோய் உண்டாகிறபோதும், அவர்கள் சத்துருக்கள் தேசத்திலுள்ள பட்டணங்களை முற்றுகையிடுகிற போதும், யாதொரு வாதையாகிலும் யாதொரு வியாதியாகிலும் வருகிறபோதும்'' (I இரா. 8:35,37) என்ருர்.

இஸ்ரவேலின் ராஜாவாகிய தாவீது தன்னுடைய ராஜாங்க விஷயத்தில் தேவனுக்கு விரோதமாகப் பாவம் செய்த பொழுது,

''கர்த்தர் இஸ்ரவேலிலே அன்று காலமே தொடங்கி குறித்த காலம் வரைக்கும் கொள்ளை நோயை வரப்பண்ணினுர்; அதினுல் தாண் முதல் பெயர்செபாமட்டுமுள்ள ஜனங்களில் எழுபதினுயிரம் பேர் செத்துப் போனுர்கள்''
(II சாமு. 24:15).

இந்த சம்பவமும் தேவ கோபமாகக் கொள்ளை நோய் தேசத்தின்மேல் இறங்குகிறதென்று விளக்குகிறதல்லவா? தேவனுடைய திருப்பிரசன்னத்தை விளக்கும் முகனுக ஆபகூக் தீர்க்கதரிசி எழுதின கீழ்க்கண்ட வேத வசனம் கொள்ளை நோய் தேவனிடமிருந்து புறப்படுகிறது என்று உறுதிப்படுத்துகின்றதன்ரே? ''அவருக்கு முன்பாகக் கொள்ளை நோய் சென்றது அவர் அடிகளிலிருந்து எரிபந்தமான காய்ச்சல் புறப்பட்டது'' (ஆபகூக் 3:5).

மோசேயும், ஆரோனும், ''கர்த்தருக்குப் பலியிடப்போகாதிருந்தால் அவர் கொள்ளை நோயும், பட்டயமும் எங்கள் மேல்

வரப்பண்ணுவார்'' (யாத். 5:3) என எகிப்தின் அரசனுகிய பார்வோன் முன்பதாகத் தைரியமாகக் கூறினுர்கள் அல்லவா? அதுமட்டுமின்றி பார்வோன் கர்த்தருடைய கட்டளைகளுக்கு எதிர்த்து நின்ருன் எகிப்து முழுவதும் "மகா கொடிதான கொள்ளை நோய் உண்டாகும்'' (யாத். 9:3) என்று அவனையும் எச்சரித்தார்களல்லவா? தேசத்தின் அரசர்கள், குடிகள் இவர்களின் அக்கிரமத்தின் மிகுதியால் கொள்ளை நோயும், வியாதிகளும் தேவ தண்டனையாகத் தேசத்தின் மேல் இறங்குகின்றன. மக்கள் அழிகிருர்கள்!

இவ்விதமாக, தேவ தண்டனையாகக் கொள்ளை நோய் தேசத்தில் இறங்கும் பொழுதும்கூட தேவன் தமக்குப் பயந்து, தம் வழிகளில் நடக்கிறவர்களைக் காக்கிருர் என வேதம் நமக்கு உறுதி கூறுகிறது.

> "கர்த்தர் நல்லவர், இக்கட்டு நாளிலே அரணான கோட்டை, தம்மை நம்புகிறவர்களை அறிந்திருக்கிருர்'' (நாகூம் 1:7).

> "இருளில் நடமாடும் கொள்ளை நோய்க்கும், மத்தியானத்தில் பாழாக்கும் சங்காரத்துக்கும் பயப்படாதிருப்பாய்; உன் பக்கத்தில் ஆயிரம் பேரும் உன் வலது புறத்தில் பதினாயிரம் பேரும் விழுந்தாலும் அது உன்னை அணுகாது. ஆகையால் பொல்லாப்பு உனக்கு நேரிடாது. வாதை உன் கூடாரத்தை அணுகாது'' (சங் 91:6, 7, 10).

போன்ற இனிய வேத வசனங்கள் இந்த உயரிய சத்தியத்தை நமக்கு நினைவுபடுத்தி ஆறுதல் தருகிறதன்ருே!

கர்த்தருடைய ஆலயத் திருப்பணிக்குத் தசம பாகங்களைக் காணிக்கையாக அளிப்பவர்களுக்குத் தேவன் இவ்வாறு ஆசீர்வாதம் தருகிருர்:

> "பூமியின் கனியைப் பட்சித்துப் போடுகிறவர்களை உங்கள் நிமித்தம் கண்டிப்பேன்; அவர்கள் உங்கள் நிலத்தின் பலனை அழிப்பதில்லை, வெளியிலுள்ள திராட்சக் கொடி பழமில்லாமற் போவதுமில்லை'' (மல். 3:11). பொல்லாத விஷப் பூச்சிகளைக் கடிந்து கொண்டு தன்னை நேசிக்கிறவர்களின் பயிர் வகைகளையும், மற்ற எல்லா விளைச்சல்களையும் காக்கும் தேவன், தன்னை நேசிக்கிறவர்களைக்

கொள்ளை நோயிலிருந்தும், தண்டனையாக வரும் வியாதிகளின் கொடூரத்திலிருந்தும் காவாமல் விட்டு விடுவாரோ? நிச்சயமாகக் காப்பார்!

நண்பரே! நீர் பூமியின்மேல் மக்களின் அக்கிரமங்கள் நிமித்தமாக வரும் தொல்லைகளுக்கு விலகி வாழ விரும்புகிறீரா? இன்றே, இப்பொழுதே உம் இருதயத்தைச் சிலுவையில் தொங்கி மரித்த இயேசு சுவாமிக்கு அர்ப்பணிப்பீராக! அவர் உம் பாவங்களை மன்னிப்பார்! உம் பெயரைத் தம் ஜீவ புஸ்தகத்தில் எழுதிக் கொள்வார்! வாதை உம் கூடாரத்தை அணுகும்பொழுது விரைந்து வந்து உம்மைக் காப்பார்! அக்கினி ஜுவாலையில் தோன்றி சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்ற தம் தாசர்களைக் காத்த தேவன் (தானி. 3:25), ஆபத்தில் உம்மோடுகூட இருந்து உம்மை விடுவித்துக் கனப்படுத்துவார் (சங். 91:15),

பல வருடங்களுக்கு முன்பாக பக்தன் ஒருவர் வட இந்தியாவில் ஒரு குறிப்பிட்ட நகரில் நற்செய்திக் கூட்டங்கள் நடத்திக் கொண்டிருந்தாராம். பலர் அக்கூட்டங்களைப்பற்றி ஏளனம் செய்தனர் (I நாளா. 30:10), சிலரோ இருதயத்தில் குத்தப்பட்டவர்களாகிப் பக்தியுடன் அக்கூட்டங்களுக்கு ஒழுங்காக வந்து பங்கு பெற்றனர். ஒரு நாள் இரவு அந்நகரம் பூமி அதிர்ச்சியால் திடீரென்று பயங்கரமாகக் குலுங்கியது. வீடுகள் நொறுங்கி விழுந்தன. காயப்பட்டோரின் வேதனைக குரல் இருளினூடே உள்ளத்தை உருக்குவதாக எங்கணும் தொனித்தது. இயேசுவின் அன்பால் நிறைந்த அப்பக்தன் உடனே எழுந்து கண்ணீரோடு அந்நகர மக்களுக்காக ஆண்டவரின் பாதத்தில் மனங்கலங்கி ஜெபித்தாராம்! விடிந்ததும், எழுந்து, வீடு வீடாகச் சென்று, மக்களை சந்தித்து ஆறுதல் படுத்தினராம்! அங்கு அவர் கண்ட ஓர் உண்மை அவரை பிரமிக்கச் செய்தது! ஆம்! அக்கூட்டங்களில் பங்கு பெற்ற ஒருவராவது பூமி அதிர்ச்சியில் மாண்டு போகவில்லை!

“கர்த்தர் தேவபக்தியுள்ளவர்களைச் சோதனையினின்று இரட்சிக்கவும் அக்கிரமக்காரரை ஆக்கினைக்குள்ளானவர்களாக நியாயத்தீர்ப்பு நாளுக்கு வைக்கவும் அறிந்திருக்கிறார், (II பேதுரு 2:9), என்ற வேதவாக்கு இந்நிகழ்ச்சியால் நிரூபணமாகிறதன்றோ! ஆம்! “என் ஜனங்கள் ஒருபோதும் வெட்கப்படுவதில்லை” (யோவேல் 2:26), என்ற வாக்குப்படி அவர் நம்மைக் காப்பார்.

'இஸ்ரவேலே, நீ பாக்கியவான். கர்த்தரால் இரட்சிக்கப்பட்ட ஜனமே, உனக்கு ஒப்பானவன் யார்? உனக்குச் சகாயஞ் செய்யும் கேடகமும் உனக்கு மகிமை பொருந்திய பட்டயமும் அவரே!......... (உபா. 33:29).

''அநாதி தேவனே, உனக்கு அடைக்கலம். அவருடைய நித்திய புயங்கள் உனக்கு ஆதாரம்'' (உபா. 33:27) என்ற தேவ ஆசீர்வாதம் அவரை நேசிக்கத் தீர்மானிக்கும் யாவர் மேலும் நிச்சயம் பலிக்கும்!





வாரம் நான்கு முறை. இதே செய்திகளும் சகோதரன் தினகரனின் ஜெபமும் வானொலியில் ஒலி பரப்பப்படுகின்றன! அதன்மூலம் ஆன்மீக சாந்தியும், சரீர சுகமும் பெறுவோர் ஆயிரக் கணக்கானோர்!

(கால அட்டவணை - மறுபுறம்)

பாபுஜீ பிரஸ், 187, மவுண்ட் ரோடு, சென்னை-2—83619

ட்டீர்களா ?

## "இயேசு அழைக்கிறார்"

### வானொலி நிகழ்ச்சிகள்

---

## "JESUS CALLS" Radio Programmes

Monday (English) 9-30 p m 19-65 or 25 (meter) Radio Seychelles

| நாள் | காலம் | மீட்டர்கள் | வானொலி நிலையம் |
| --- | --- | --- | --- |
| வியாழக்கிழமை | மாலை 6-45 | 19-65 அல்லது 25 | சேஷெல்ஸ் |
| சனிக்கிழமை | காலை 8-45 | 19-65 அல்லது 25 | சேஷெல்ஸ் |
| புதன்கிழமை | காலை 7-30 | 19-61 | மணிலா |
| ஆங்கிலம் திங்கட்கிழமை | இரவு 9-30 | 19-65 அல்லது 25 | சேஷெல்ஸ் |

If you need Prayers

Please write to:

**Bro. DHINAKARAN**

Post Box No. 2472.

Madras-600029

உங்கள் ஜெப உதவிக்கு

எழுதவேண்டிய முகவரி: —

**சகோ. தினகரன்**

தபால் பெட்டி 2472

சென்னை-600029

Telegrams : "JESUCALLS" Madras-600029

---

**வாசித்தீர்களா ?**

## "இயேசு அழைக்கிறார்" பத்திரிகை !

தேன்போல் இனிக்கும் தெய்வீக செய்திகளடங்கிய ஏடு !

**வருட சந்தா ரூ. 8/- தான்**

மணி ஆர்டர், ரிஜிஸ்தர் தபால் அனுப்பவேண்டிய முகவரி :—

**"இயேசு அழைக்கிறார்"**

சென்னை-600 029

---

**விலை ரூ. 1-00**